4 பக்கங்கள் 13 காசுகள்

பதிவு எண்: எம். 8798.

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 10] மதுரை 30-9-72 சனி [மலர் 230

## காங்கிரஸ் அரசின் "சாதனை"

சண்டிகார், செப். 28—

பஞ்சாப் மாநிலத்தில் அக்டோபர் 15-ம் தேதி முதல், நாளொன்றுக்கு 22 மணி நேரம் மின்சார வெட்டு செய்யப்படுமென்று மாநில அரசு அறிவித்துள்ளது. இந்த மின்சார வெட்டு ஒன்றரை மாத கால நீடிக்கும்.

இவ்வாறு ஒரேயடியாக 22 மணி நேர மின்வெட்டு இதற்கு முன் எங்கும் எப்போதும் ஏற்பட்டிராத மின்வெட்டாகும்.

## காங்கிரசின் தீபாவளிப் 'பரிசு'

புதுடெல்லி, செப். 28—

ஒரு கிலோ சீனி விலையை 2 ரூபாய் 14 பைசாவாக உயர்த்த இந்திரா காங்கிரஸ் அரசாங்கம் முடிவு செய்துள்ளது. இந்த விலை உயர்வு நவம்பர் மாத மத்தியிலிருந்து அமுலாக்கப்படும்.

உடனடியாக அக்டோபர் முதல் தேதியிலிருந்து 1 கிலோ ஜீனியை ரூ. 2 ஆக உயர்த்துவது என்றும் முடிவு செய்துள்ளது.

### எதிர்க் கட்சித் தலைவர்கள் மீது தாக்குதல்

# மே. வங்க முதலமைச்சர் அறிக்கை ஆபத்தானது

## தோழர் ஜோதிபாசு எச்சரிக்கை

கல்கத்தா, செப். 25—

**மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக் கூட்டத்தில் காங்கிரஸ் குண்டர்கள் கலாட்டா செய்ததுபற்றியும், காரைத் நாக்கியது பற்றியும் மேற்குவங்க முதலமைச்சர் செய்திருக்கும் விபரீதமான விமர்சனத்தை தோழர் ஜோதிபாசு கண்டித்துள்ளார்.**

பெருய்பூரில் தோழர்கள் ஜோதிபாசும், ஜோதிர்மாய்பாசும் பேசிய கூட்டத்தில் காங்கிரஸ் குண்டர்கள் கலாட்டா செய்ததையும் அவர்கள் சென்ற காரைத் தாக்கியதையும் கண்டிக்காமல் மேற்கு வங்க முதலமைச்சர் விபரீதமானமுறையில் விமர்சனம் செய்துள்ளார்.

இந்தத் தாக்குதல் பற்றி மேற்கு வங்க முதலமைச்சர் சித்தார்த்த சங்கர்ரே செய்திருக்கும் விமர்சன மும்கடைப்பிடிக்கும்அணுகுமுறையும் ஆபத்தானது என்று தோழர் ஜோதிபாசு விடுத்துள்ள அறிக்கையில் கூறியுள்ளார்.

வரும் ஐந்து ஆண்டு காலத்துக்கு எவ்விதப் போராட்டங்களும், ஆர்ப்பாட்டங்களும் நடைபெறக் கூடாது என்ற முதலமைச்சரின் அறிக்கையின் பின்னணியில்தான் இந்தச் சம்பவங்களைப் பார்க்க வேண்டியுள்ளது என்று தோழர் ஜோதிபாசு தன் அறிக்கையில் குறிப்பிட்டுள்ளார்.

ஜோதிபாசு அறிக்கை வருமாறு:—

பெருய்பூரில் காங்கிரஸ் குண்டர்கள் எனதுகாரைத தாக்கியதை மறைப்பதற்காக காரில் கோளாறு ஏற்பட்டு விபத்து ஒன்று நேர்ந்தது. என்று பொருள்படும் முறையில் முதலமைச்சர் அறிக்கைவிட்டுள்ளார். இது மிகவும் கண்டிக்கத்தக்கதாகும்,

பெருய்பூரில் நடைபெற்ற சம்பவத்துக்கு முதலமைச்சரின் விமர்சனமபற்றி நாம் ஆச்சரியப்பட வேண்டியதில்லை. ஏனெனில் தன்னுடைய கட்சியைச் சேர்ந்த குண்டர்களின் தாக்குதலை மூடி மறைப்பதும் அவர்களுடையபிரச்சாரத்துககு பக்கமேளம் வாசிக்க வேண்டியதும் முதலமைச்சரின் கடமையாக இருக்கிறது,

முதலமைச்சர் கூறியதைப் போன்று என்னுடைய காருககு எந்தவிதரிப்பேரும் ஏற்படவில்லை என்று நான் வலியுறுத்த விரும்புகிறேன்.

தனியார் கார் என்ற பாவனையில் என் காருக்குப் பின்வந்த காவல் துறையினரின் காவலிலிருந்தவர்களிடமிருந்து இதுபற்றி தெளிவு பெற முடியும்.

கூட்டத்தில் பேசிய பேச்சாளர்கள் அனைவருமயாரையும் தாக்கிப் பேசவில்லை நாங்கள் பேச ஆரம்பிப்பதற்கு முன்பே இருபதுக்கு மேற்பட்ட காங்கிரஸ் குண்டர்கள் மேடைக்கு அருகே வந்து கோஷம் போட போலீஸ் அனுமதித்தது. குண்டர்களுடன் மோத வேண்டாம் என்று கூட்டத்திலிருந்த பல்லாயிரக்கணக்கான மக்களிடமும். கூட்டத்துக்கு ஏற்பாடு செய்த தோழர்களிடமும் நானே வேண்டுகோள் விடுத்தேன்.

ஏனென்ருல் மோதல் ஏற்பட்டால் ஆயுதம் தாங்கிய போலீஸ் தலையிட்டு ரத்தக் களரியில் பலர் மடிய நேரிடும் என்பதாலேயே அந்த வேண்டுகோளை நான் விட்டேன்.

### போலீஸ் உடந்தை

கூட்டத்தைக் கலைக்க முயன்ற ரௌடிகளை அப்புறப்படுத்த வேண்டும் என்று போலீஸ் அதிகாரிகளிடம் நான் கூறினேன். அதனுல் எவ்விதப் பயனும் ஏற்படவில்லை.

போலீஸ் அதிகாரிகளின் முன்பே ஒலிபெருக்கி வயர்களும், மின் வயர்களும் துண்டிக்கப்பட்டன.

இந்தக் கூட்டத்துக்குப் பாதுகாப்பு அளிக்க போலீஸ் வந்திருக்குமேயானுல் இப்படிப்பட்ட கலாட்டாவில் இறங்க குண்டர்களுக்கு தைரியம் வந்திருக்காது.

அதே போன்று கூட்டம் முடிவுற்று மக்கள் திரும்பும் வழியில் போலீஸ் நிலையத்துக்கு அருகில் எனது காரும் எனக்கு பின்னுல் வந்த காவல் துறையினா கார்களையும் ரௌடிகள் தாக்கினர்.

ஆனுல் ஆயுதம் தாங்கிய போலீசார் இதனைவேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தனர்.

எனக்குப் பாதுகாப்பு அளிக்க அவர்கள் எவ்வித நடவடிக்கையும் எடுக்கவில்லை.

### பயமுறுத்தல்

முதலமைச்சர் எவ்வளவுதான்பொய்ப்பிரச்சாரத்தில் ஈடுபட்டாலும் இச் சம்பவம் நேருவதற்கு இரண்டுதினங்களுக்கு முனபே நான் பேசவிருக்கும் பொதுக்கூட்டத்தில் யாரும் கலந்துகொள்ளக்கூடாது என்று நன்கு தெரிந்த ரவுடிகள் பகிரங்கமாக மக்களைப் பயமுறுத்தினர்.



இந்த உண்மையை முதலமைச்சரால் மறுக்க முடியாது. எனெனில் இக் கோஷங்கள் பொறிக்கப்பட்ட போஸ்டர்கள் பல இடங்களில் ஒட்டப்பட்டிருந்தன. இக் கூட்டத்தைநடக்க விடமாட்டோம்என்று அவர்கள் பகிரங்கமாகவே கூறி வந்தனர்.

இத்தச் சம்பவங்களைப் பற்றி அப்போதைக்கப்போதே போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரலிடம் அறிவிக்கப்பட்டது.

[4-ஆம் பக்கம் பார்க்க]

### அரசாங்க மட்டத்தில் உறவு

# சீனஜப்பான் உடன்பாடு

## சியாங் கும்பலுக்கு கல்தா

பீக்கிங், செப். 29—

**மக்கள் சீனக்குடியரசின் பிரதம மந்திரி சூ-என்-லாயும் ஜப்பான் நாட்டுப் பிரதமர் தனகாவும் பீக்கிங்கில் சந்தித்து நடத்தியபேச்சுவார்த்தைக்குப்பின்மக்கள்சீனமும், ஜப்பானும் மீண்டும் தங்களிடையே அரசாங்க உறவை ஏற்படுத்திக்கொள்வதென முடிவு செய்துள்ளனர்.**

இந்த முடிவை சீனப் பிரதமர் ஜப்பானியப் பிரதமருக்கு அளிக்கப்பட்ட விருந்துபசாரததின் போது அறிவித்தார். அப்பொழுது பேசிய ஜப்பானிய பிரதமர் தனகா இந்தப் புதிய முடிவு "ஆசிய நாடுகளிடையே கெடுபிடி நிலையைத்தணிப்பதற்கும், உலக சமாதானத்தை உறுதிப் படுத்தவும் உதவி புரியும்" என்ருர்.

சூ-என்-லாய் பேசுகையில குறிப்பிட்டதாவது:

"இரு நாடுகளுக்கிடையே நிலவும் அசாதாரண நிலைமைக்கு ஒரு முடிவு காண வேண்டியது அவசியம். சீனுவும், ஜப்பானும் முற்றிலும் மாறுபட்ட இருவேறு சமுதாய அமைப்புகளை உடைய நாடுகள். எனினும் இன்று இந்த இரு நாடுகளுக்கிடையே நீண்டகாலமாக நிலவிவரும் யுத்தப்பிரகடன நிலைமைக்கு முற்றுப்புள்ளி வைத்து, நம உறவுகளில் ஒரு புதிய அத்தியாயத்தை துவக்கிவிடுவது ஆசியாவில் கெடுபிடி நிலையைத் தணிக்கப்பயன்படும் என்ருர்.

இரு நாடுகளும் நம உறவுகளைப் பஞ்ச சீலக் கொள்கைகளின் அடிப்படையில் அமைத்துக் கொள்ளுமானுல் அதாவது இருநாடுகளும் பரஸ்பரம் ஒரு நாடு மற்ற நாட்டின் சுதந்திர உரிமையையும் பிரதேச ஒருமைப் பாட்டையும் மதிதது நடப்பது-ஒரு நாட்டின் உள் விவகாரத்தில் மற்ற நாடு தலையிடாதிருத்தல் பரஸ்பரம் பலன் தரும் வகையிலும் சமத்துவ அடிப்படையிலும் உறவுகளை அமைத்துக கொள்ளுதல்-சமாதான சகவாழ்வைப் பின்பற்றுதல் ஆகிய கொள்கைகளின் அடிப்படையில் அமைத்துக் கொள்ளுமானுல், நமது இரு நாடுகளிடையே நல்லுறவு மேலும் பலப்பட்டு வளரும என்று சூ-என்-லாய் குறிப்பிட்டார்.

### தைவானுடன் உறவு ரத்து

டோக்கியோ, செப். 29—

மக்கள்சீனத்துடன்ஜப்பான் ஸ்தானீக (அரசாங்க மட்டத்தில் உறவு) அமைத்துக் கொள்ள முடிவெடுத்த அதே நிமிடத்தில் தைவானுடன் (சியாங்கேஷேக் தலைமையிலுள்ள சீனத்தின் பகுதியான சீனத்தீவு) ஜப்பான் கொண்டுள்ள உறவை ரத்து செய்து கொள்கிறது என்று ஜப்பானிய வெளிவிவகார அமைச்சர் மிக்கி இன்று அறிவித்தார்.





--- அரசாங்கம் தரும் புள்ளி விவரம்.

### அழிக்கோடன் கொலை

# கூட்டணி கட்சிகள் அறிக்கைக்கு இ. எம். எஸ். பதில்

திருவனந்தபுரம், செப். 28—

அழிகோடன் ராகவன் கொலை பற்றி சட்ட மன்றத்தில் இ. எம். எஸ். கூறிய குறறச்சாட்டுக்கு பதில் கூறும முறையில் ஆளும் கூட்டணிகட்சியினர் கூட்டறிக்கை விட்டுள்ளன. அந்தக் கூட்டறிக்கைக்குப் பதிலளிக்கும்முறையில் தோழர் இ. எம். எஸ். நம்பூதிரிபாத் கீழ்வரும் அறிககையை விடுத்துள்ளார்.

உள்துறை அமைச்சரின் கௌரவத்தைக் காக்க வேண்டும் என்பதற்காகத் திட்டமிட்ட முறையில் அழிக்கோடன் ராகவன் கொலை செய்யப்பட்டுள்ளார் என்ற சந்தேகத்தை அந்த அறிக்கையில இ. எம. எஸ். மீண்டும் வலியுறுத்தியுள்ளார்.

### ஆளும் கூட்டணி மறுக்க முடியுமா?

"நவாப்" பத்திரிகையில் பிரசுரமான போட்டோ பிரதியின் மூலத்தைப் பெற வேண்டும் என்பதற்காக அந்தப் பத்திரிகையின் ஆசிரியர் அழிக்கோடன் ராகவன் வீட்டுக்குக் கொண்டு போகப்பட்டார்.

அப்போது அந்தப் பத்திரிகை ஆசிரியரின் வக்கீல் போல வேடம் தரித்துக் கொண்டு போலீஸ் இன்ஸ்பெக்டர் அழிக்கோடன் ராகவன் வீட்டுக்குச் சென்றிருக்கிருர்.

இதை மறுக்க முடியுமா, என்று ஆளும்கட்சி தலைவர்களுககு நான் சவால் விடுகிறேன். இது உண்மையாக இருக்குமானுல் போலீஸ் இன்ஸ்பெக்டரின் நடத்தையை விளக்குவார்களா என்று தோழர் இ எம் எஸ் வினு எழுப்பினுர்.

"நிர்ப்பந்தத்தின் கீழ் அழைத்துச் செல்லப்பட்ட பத்திரிகை ஆசிரியர் போலீஸ் காவலில் தனக்கு ஏற்பட்ட அனுபவத்தைப் பற்றி எனக்குக் கடிதம் எழுதியுள்ளார். அந்தக் கடிதத்தின் நகலை பிரதம மந்திரிக்கு நான் அனுப்பி வைத்துள்ளேன். 'நவாப்' பத்திரிக்கை ஆசிரியர் கூறியிருக்கும் விவரங்களும் அவர் அழிக்கோடன் ராகவன் வீட்டுக்கு அழைத்துச் செல்லப்பட்ட சூழ்நிலையும் போலீஸ் பற்றி யும் யாருடைய மனதிலும் நியாயமான சந்தேகததையே எழுப்பும்.

### விசாரணை நடத்தாதது ஏன்?

பத்திரிகை ஆசிரியர் கடிதத்தில் கூறியிருக்கும் விஷயங்கள் பற்றியும் தம் வீடடுக்குப் போலீஸ் அதிகாரி வந்தது பற்றி அழிக்கோடன் ராகவன் விடுததிருந்த அறிக்கை பற்றியும் விசாரணை நடத்த ஆளும் கட்சிகள் சம்மதிக்காதது ஏன்?" என்று இ. எம். எஸ். தன் அறிக்கையில் கேட்டுள்ளார்.

இந்தப் பின்னணியில் இந்த அரசின் போக்கில் யாருக்கும் சந்தேகம் ஏற்பட்டால அதுபறறி தம் மீது குறைபட்டுப் பயனில்லை என்றும் இ. எம். எஸ். கூறியுள்ளார்.

### குற்றச்சாட்டுக்கு ஆளும் கூட்டணி

#### நொண்டிச் சமாதானம்

திருவனந்தபுரம். செப். 28—

அழிக்கோடன் ராகவன் கொலை சம்பந்தமாக இ எம் எஸ் குற்றச்சாட்டை மறுத்து, கேரளத்தின் ஆளும் கூட்டணியின் 6 கட்சிகளைச் சேர்ந்த தலைவர்கள் இன்று கூட்டறிக்கை விட்டுள்ளார்கள் ("நவாப்" பத்திரிகையில் வெளியான போட்டோ பிரதி கடிதம் வெளியானது சம்பந்தமாக உள்துறை அமைச்சரைக் காப்பதற்காக இக்கொலை புரியப்பட்டுள்ளது என்று சட்ட மனறத்தில் இ எம் எஸ் குற்றம் சாட்டினுர்.)

'நவாப்' பத்திரிகை விவகாரத்தை இழுத்து உள்துறை அமைச்சர்மீது தாக்குதல் தொடுப்பது கொடுமையானதும், கண்டிக்கத்தக்கதும் வருந்தத்தக்கதும் ஆகும் என்று அந்தக் கூட்டறிக்கையில் அவர்கள் கூறியுள்ளனர்.

ஆளும் கூட்டணி கட்சிகள் வன்முறை அரசியலை ஆதரிக்கவில்லை என்று மார்க்சிஸ்ட் கட்சிதான் ஆதரிக்கிறதுஎன்றும் அவர்கள் தாக்கியுள்ளனர்.

### பெண் எம். எல். ஏ. உயிருக்கு ஆபத்து

திருவனந்தபுரம், செப். 28—

கேரள சட்ட மன்றத்தில் அரசின் மீது நம்பிக்கை இல்லா தீர்மானத்தை ஆதரித்து ஓட்டுப்போட்டபெண் எம் எல் ஏ ஒருவரின் உயிருக்கு ஆபத்து ஏற்பட்டது

#### அறைக்குள் புகுந்தனர்

சட்டமன்ற விடுதிக்குள் பென்னம்மா ஜாகப் என்ற அந்த சுயேச்சை உறுப்பினரை காங்கிரஸ் ஆதரவு மாணவர் சங்க உறுப்பினர்கள் தாக்க முயன்றனர்.

சட்ட சபை விடுதிக்குள் இருந்த பென்னம்மா ஜாகப்பின் அறைக்கே வந்து அவர்கள் இத்தகைய வெறிச்செயலைச் செய்தனர்.

அழிக்கோடன் ராகவனுக்கு ஏற்பட்ட கதி தமக்கும் வந்துள்ளதாக அஞ்சி தாம் அறையைவிட்டு ஓடியதாகவும் பென்னம்மாஜாகப் சட்டமன்றத்தில் புகார் கூறினுர் தமக்குப்பாதுகாப்பு அளிக்குமாறு சபாநாயகரையும் அமைச்சர்களையும் அவர் கேட்டுகொண்டார்.

இவ்விஷயத்தை இவ்வாறு சட்டமன்றத்தில் எழுப்பியதை சபாநாயகர் கண்டித்தார் இச்சம்பவத்தைப் பற்றி கேள்விப்பட்டதும், மார்ஷல் விரைந்து சென்று ஐவரைப் பிடித்ததாயும் சபாநாயகர் கூறினுர்.

எழுத்து மூலம் புகார் கொடுத்தால்தான் நடவடிக்கை எடுக்க முடியும் என்றும் சபாநாயகர் கூறினுர்.

## சர்மாவின் கரடி!

"அமெரிக்க உளவு ஸ்தாபனமான சி. ஐ. ஏ. இந்தியாவில் வன்முறையைத் தூண்டிவிடுகிறது. இந்தியாவின் கிழக்குப் பகுதியில் மக்கள் நடத்தும் போராட்டங்களில் சி. ஐ. ஏ. தன்னுடைய கையாட்கள் மூலம் வன்முறையைத் தூண்டி விடுகிறது.

நாட்டிலுள்ள பொருளாதார நெருக்கடியை உபயோகித்து, இந்தியாவைப் பலவீனப்படுத்துவதற்காகவே சி. ஐ. ஏ. இத்தகைய நடவடிக்கையில் ஈடுபடுகிறது. தீவிர இடதுசாரிகளும், தீவிர வலதுசாரிகளும் ஒன்றுபடுவது சாத்தியமே. அதற்கு உதாரணம் நிக்சனும்—மா-சே-துங்கும் சந்தித்துப் பேசவில்லையா?

—காங்கிரஸ் தலைவர் சங்கர்தயாள் சர்மா ஸ்ரீநகரில் பேசியது.

[குறிப்பு: காங்கிரசின் மக்கள் விரோதக் கொள்கைகளுக்கு எதிராக, விலை வாசி உயர்வுக்கு எதிராக, வேலையில்லாத் திண்டாட்டத்திற்கு எதிராக, மக்களது பேரெழுச்சி உருவாகிவருகிறது இன்று. இந்த ஜனநாயக எழுச்சியைத் திசை திருப்ப சி. ஐ. ஏ. கரடி விடுகிருர் காங்கிரஸ் தலைவர் சர்மா.]

### விலைவாசி குறியீட்டெண் மீண்டும் உயர்கிறது

புதுடெல்லி, செப். 26—

ஆகஸ்ட்கடைசியில் விலைகள் சற்று குறைந்ததாக கருதப்பட்டது. அதுவெறும் பிரமையாகவே முடிந்தது. செப்டம்பர் துவக்கத்தில் விலைகள் கிடுகிடு வென்று உயர்ந்துள்ளது.

செப். 9-ம் தேதி முடிவடைந்த வாரத்தில்அதற்கு முந்தைய வாரத்தைவிட மொத்த விலைவாசி குறியீட்டெண் 0.5 சத விகிதம் கூடியுள்ளது.

இந்த ஆண்டு செப் 9-ம் தேதி நிலவிய விலைகள் சென்ருண்டின்இதே காலத்திலிருந்த விலைகளை விட 8 சத விகிதம் அதிகமாகும். ஒரே வாரத்தில் உணவுப் பொருட்களின் விலைகள் ஒரு சத விகிதம் உயர்ந்துள்ளது.

## இந்தியாவின் செலாவணி இருப்பு வீழ்ச்சி

புதுடெல்லி, செப். 28—

இந்தியாவின் அந்நியச் செலாவணி இருப்பு ஐந்து வாரங்களில் ரூ. 50 கோடி குறைந்திருப்பதாக இம்மாத துவக்கத்தில் கிடைத்த புள்ளி விவரங்களின்படி தெரிகிறது.

இப்போது இந்தியாவின் அந்நியச்செலாவணிஇருப்பு ரூ. 500 கோடிக்கும் குறைவாக இருக்கிறது.

அந்நியச் செலாவணி இருப்பு இவ்வாறு குறைந்ததற்குக் காரணம் கடன் நிவாரணம்பற்றிய கோரிக்கைக்கு இந்தியாவுக்கு உதவும் நாடுகள் குழு இன்னும் இணங்காததேயாகும். இந் நிலையில் பழைய கடன்களுக்கும். சர்வீசுக்கும், வட்டிக்கும்செலாவணி இருப்பைப் பயன்படுத்த நேர்ந்துள்ளது. முக்கியமாக அமெரிக்கக் கடன்களுக்கு இவ்வாறு கொடுக்க நேர்ந்துள்ளது.

கடந்த டிசம்பரில் பாகிஸ்தானுடன்ஏற்பட்ட யுத்தத்தில் அமெரிக்க "உதவி" நிறுத்தப்பட்டது. அதே சமயம் இவ்வாண்டு அமெரிக்கக்கடனுக்கு ரூ15கோடி டாலர் கொடுக்க வேண்டியுள்ளது.

இதில் ஒரு பகுதி ஜுலை, ஆகஸ்ட் மாதங்களில் கொடுக்கப்பட்டது.

செண்டு. எண்ணெய், உருக்கு, உரம் போன்ற பொருள்களின் இறக்குமதி அதிகரித்ததாலும் செலாவணி இருப்பு குறைந்தது.

# தீக்கதிர்

## சர்க்கரையில் புரியும் லீலைகள்

இயந்திரத்தில் உற்பத்தியாகும் பொருள்களின் விலை உயர்ந்துகொண்டே போகின்றன. பருத்தி, கரும்பு சம்பந்தப்பட்டபொருள்களின் விலைகள் உயருகின்றன.

ஆனல், உற்பத்தி செய்கிருனே விவசாயி பருத்தி கரும்புபோனற அவனுடையபொருள்களின் விலைகள் உயர்கின்றனவா? இல்லை.

கீழ்க்காணும் புள்ளிவிபரம் கூறும் சோகக் கதை கேளீர்!

சர்க்கரைக் கட்டுப்பாடு நீக்கப்பட்ட சென்ற மூன்றுண்டு காலத்தில் கரும்பு உற்பத்தி படிப்படியாக 12 கோடியே 50 லட்சம் டன் ஆக உயர்ந்துள்ளது.

இதில் நாட்டுச் சர்க்கரை, வெல்லத்திற்காகப் பயன்படுத்தப்படுவது ஒரே அளவில்தானுள்ளது. அதாவது 7 கோடியே 40 லட்சம் டன்தான். அதிகம் உற்பத்தியான மீதி கரும்பு முழுதும், சர்க்கரை (ஜீனி) உற்பத்திக்கே முதலாளிகளால் பயன்படுத்தப்பட்டுள்ளது.

இன்று நம் நாட்டிற்குத் தேவையான சர்க்கரை 40 லட்சம் டன்தான்!

1972-ல் உற்பத்தியான சர்க்கரை எவ்வளவு? 42 லட்சம் டன்; 1973-ல் உற்பத்தியாகப் போவது சுமார் 43 லட்சம் டன். அப்படியிருந்தும் விலைவாசி உயர்வது ஏன்?

1968-69-ல் கருப்பு உற்பத்தியாளருக்கு ஒரு குவின்டால் கரும்புக்கு ரூ. 12-லிருந்து ரூ 15 வரை கொடுக்கப்பட்டது. அந்தச் சமயத்திலே ஒரு கிலோ சர்க்கரை விலை என்ன? ரூ. 1—75.

கருப்பு உற்பத்தியாளருக்குக் கொடுத்த விலையும் நியாயமானது. சர்க்கரை விலையும் குறைவு.

இதன்பிறகு மத்திய அரசு சர்க்கரைக் கட்டுப்பாடை நீக்கியதன் விளைவு? வெளி மார்க்கெட்டில் சாக்கரைவிலை கிலோ ரூ.4க்கு விற்கிறது.

அதே சபயத்தில் சர்க்காரால் நியமிக்கப்பட்ட விவசாய விளைப்பொருள் கமிஷன் கரும்பு உற்பத்தியாளருககுத தரப்படும விலையை ஒரு குவிண்டால் ரூ. 8 ஆகக குறைத்தது.

உற்பத்தியாளருக்குக் கரும்பு விலையும் குறைந்தது. மக்களுக்குசர்க்கரைவிலையும்உயர்ந்தது

இதும டுமல்ல. ரூ. 4 என்று இந்தியாவில் விற்கப்படும் சர்க்கரை நமது அரசாங்கத்தால் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டு விற்கப்படும் விலை என்ன? ஒரு கிலோ 94 காசுதான்.

இன்று செப். 28-ம் நாள் வெளியான செய்தியின்படி மத்திய அரசு சர்க்கரை முதலாளிகள் 1972—73-ம் ஆண்டில் முந்தைய ஆண்டைவிட அதிக சர்க்கரை உற்பத்தி செய்தால் ஒரு குவிண்டாலுக்கு ரூ. 20, ரூ. 30, ரூ.40 என்று அதிகஉற்பத்திக்குத் தகுந்தவாறு எக்சைஸ் வரி தள்ளுபடி செய்யப்படும் என அறிவிக்கிறது.

இதற்குப் பெயர் என்ன? திட்டமிட்டு ஒரு சிலர் அரசாங்க ஆதரவுடன் நடத்தும முதலாளித்துவப் பகற்கொள்ளை.

மத்திய அரசின் இந்தப் போக்கு நீடிக்கும் வரை சர்க்கரை விலை; குறையாது சர்க்கரை ஆலை முதலாளிகள் வைப்பது தான் சட்டமாக இருக்கும்.

சர்க்கரை ஆலைகளைநாட்டுடையாக்க வேண்டும் உடனடியாக சர்க்கரை உற்பத்தி அனைத்தையுமே அரசே ஏற்று வினியோகஞ் செய்யவில்லையானல் விலைகளை மேலும் உயர்த்திக் கொடுமைப்படுத்துவது தீவிரமாகும்.

## இனவெறிக்கு தூபம்

இந்தியா முழுவதும் ஒரே நாடு என்றும். இங்கிலையில் குறுகிய பிரதேச வெறிக்கு இடமளிக்கக் கூடாது என்றும் பிரதம மந்திரி இந்திராகாந்தி அண்மையில் உபதேசம் செய்துள்ளார்.

தங்கள் மாநிலங்களிலும் உருக்காலைகளை அமைக்கவேண்டும்என்று பல மாநிலங்கள் கேட்பதற்கு இந்திராவின் உபதேசம் இது.

இந்திராகாந்தியின் உபதேசத்துக்கும், காங்கிரஸ் கட்சியின்நடைமுறைக்கும பெரும்இடைவெளிஉண்டு. அரசின் கொள்கைகளின் விளைவாக ஏறபட்டிருக்கும் வேலையில்லாத் திண்டாட்டத்தை காங்கிரஸ் சமாளிக்கும் முறை என்ன?

வங்கத்தில் "வங்காளியர்களுக்கே வேலை", என்ற கோஷத்தை சித்தார்த்த சங்கர்ரே அரசு அறிவித்தது.

இதைப் பின்பற்றி "கர்னடக மாநிலத்திலும் கன்னடத்தாருக்கே ரூ. 500க்கு கீழ வருவாய் உள்ள பதவிகள்" என்ற திட்டம் மைசூரில் உருவாக்கப்பட்டுள்ளது.

இந்த உறுதிமொழியை பொதுத்துறை நிறுவன அதிகாரிகள் கூட்டத்தில் மைசூர் தொழில் அமைச்சர் திரு. எஸ். எம். கிருஷ்ண வாங்கியுள்ளார்.

வேலைகோரி இளைஞர்கள் நடத்தும போராட்டத்தை திசை திருப்புவதற்கு இந்திரா காங்கிரஸ்காரர்கள் இவ்வாறு குறுகிய தேசிய இனவெறியை கிளப்பி விட்டிருக்கிருர்கள். இதற்கு இந்திரா காந்தி என்ன பதில் கூறுவார்?

## மேல் கோதையாற்றில் இனவெறியாட்டம்

மேல்கோதையாறு, செப். 28—

கன்னியா குமரி மாவட்டத்தில் மேல் கோதையாறு பகுதியில் மின்சார அணைக்கட்டு வேலை நடைபெற்று வருகிறது. இதில் பல்வேறு இனத்தைச் சேர்ந்த தொழிலாளர்கள் பாகுபாடின்றி கடுமையாக உழைத்து வருகின்றனர். இதில் தி. மு. க. வைச் சேர்ந்த தொழிலாளர் முன்னேற்றச் சங்கம், மலையாளிகளுக்கு வேலை கொடுக்கக் கூடாது என்று சென்ற மே மாதம் 6-ம தேதி முதல் 11-ஆம் தேதிவரை உண்ணுவிரதம் நடத்தினர்.

நெல்லை சட்டமன்ற தி. மு. க உறுப்பினர் திரு. எட்மண்ட் தலையிட்டு 4 மலையாளத் தொழிலாளர்களை தற்காலிக வேலை நீக்கம்செய்வது உட்பட அநீதிகளைச்செய்துள்ளனர்.

மின்சாரத் தொழிலாளர்களின் மத்திய அமைப்பும், மார்க்சிஸ்ட் கமயூனிஸ்ட் கட்சியும் இதில் தலையிட்டு அந்த நானகு பேர்களுக்கு மீண்டும் வேலை வாங்கிக் கொடுத்துள்ளது.

### வீடு புகுந்து தாக்குதல்

தி மு க சங்கத் தலைமை தமிழர் படை என்ற ஒரு படையை ஏற்படுத்தி மலையாளிகள் குடியிருக்கும் வீடுகளில் புகுந்து கட்டையாலும், இரும்பாலும்தாக்கி வருகின்றனர். பெணகளையும்,குழந்தைகளையும் அடித்தும், பயமுறுத்தியும்வருகின்றனர்.கேரளத்திற்கு ஓடிப் போகவேண்டுமென ஆர்ப்பாட்டம் செய்கின்றனர்.

### போலீசையும் விடவில்லை

இது சம்பந்தமாக 2-7-72ல் விசாரணை செய்ய வந்த மாவட்ட உயர்போலீஸ் அதிகாரியையும்,சில போலீஸ் காரர்களையும் கட்டையாலும்;இரும்பாலும் தாக்கிக் காயப்படுத்தியுள்ளனர்.

### மின்வாரிய காலனியில் இடம்

மின் வாரியத் தொழிலாளர்கள் குடியிருக்கும் இடத்தில் தமிழா படை அலுவலகம் இயங்க இடம் ஒதுக்கப்பட்டுள்ளது. அங்கே கறுப்பில்டைமண்ட் வடிவத்தில் சிவப்பு வண்ணத்துடன் கொடி ஒன்று ஏற்றப்பட்டுள்ளது. தி. மு. க. சங்க முக்கிய நிர்வாகியான கருப்பசாமி என்பவர் அதனது தலைவராவார். மின் வாரியத்தில் வேலை செய்யாத இந்திர சேனன் என்பவர் தமிழர் படையின் செயலாளராக இருக்கிருர். இவருக்கு மின்வாரிய குவார்ட்டர்ஸில்வீடு ஒன்றை (ரெக்கரியேசன்கிளப்எதிரில்) இலவசமாக ஒதுக்கித் தரப்பட்டுள்ளது. இதற்கு பக்கபலமாக அங்குள்ள மின்வாரிய இன்ஜினியர் (அதிகாரி) இருப்பதாக கூறப்படுகிறது.

மேற்கண்ட சம்பவங்கள் முழுவதையும் மத்திய அமைப்பின் பொதுச் செயலாளர் நேரில் 17—9—72ல் சென்றபோது பார்க்கவும், கேட்கவும் முடிந்தது. அங்குள்ள மலையாளத் தொழிலாளர்கள் எவ்விதப் பாதுகாப்புமின்றி வாழ்கின்றனர். கணணீர் பெருகும் இச்சோக சம்பவங்களுக்கு முடிவு கட்ட வேண்டும் என்று கேட்டுக் கொண்டனர்.

போலீஸ் அதிகாரிகளைத் தாக்கிய 15 பேர்கள் ஜாமீனில் விடப்பட்டுள்ளனர். அவர்கள் இப்பொழுது மேல் கோதையாறில் தங்கி மீண்டும் குழப்பமும், கலவரமும்செய்ய முயலுகின்றனர்

தொழிலாளர்கள் மத்தியில் இனவெறி - கசப்புணர்ச்சியை தவிர்க்க அரசு தீவிர நடவடிக்கை மேற்கொள்ளகோரியும்,போலீஸ் பாதுகாப்பு அதிகரிக்க கோரியும், தமிழர் படை செயலாளருக்கு மின்வாரிய காலனியில் இடம் கொடுக்கக்கூடாது என்று கோரியும் தொழிலாளர்கள் ஒன்றுபட்டுப்போராடி வருகின்றனர்.

## சர்க்கரை முதலாளிகளுக்கு அரசு சலுகை

புதுடில்லி, செப். 27—

சர்க்கரை மீதான எக்சைஸ் வரிக்கு கழிவு செய்யப்படுவது பற்றி இந்திய அரசாங்கம் இன்று அறிவிப்பு வெளியிட்டுள்ளது.

சர்க்கரை முதலாளிகளுக்கு அளிக்கப்படும் இந்தச் சலுகைக்கு அரசாங்கம் கூறும் காரணம் இந்தக் கழிவின் மூலம் கரும்பு பயிரிடுவோருக்கு நல்ல விலை கிடைக்கும். அதனல் உற்பத்தி பெருகும் என்பதாகும்.

1972-73-ம் ஆண்டின் பருவத்தில் குறிப்பிட்ட அளவுக்கு மேல் உற்பத்தியாகும் சர்க்கரைக்கு இந்த எக்சைஸ் வரி கழிவு (ரிபேட்) கிடைக்கும்.

1972—73-ம் ஆண்டில் (1972 அக்டோபர் 1-ம் தேதி அல்லது அதற்குப்பின். சர்க்கரை உற்பத்தி செய்யும் புதிய தொழிற்சாலைகளுக்கு அந்த ஆண்டில் 5000 டன்னுக்கு மேலான உற்பத்திக்கு குவின்டாலுக்கு ரூ. 40 வீதம் கழிவு செய்யப்படும்.

இவ்வாருக வெவ்வேறு மாதங்களுக்கு சர்க்கரை முதலாளிகளுக்கான சலுகைத் திட்டத்தை அரசு அறிவித்துள்ளது.

## வேலியே பயிரை மேய்கிறது

## ஆலை முதலாளிகளுக்கு அதிகாரி தரும் ஆலோசனை

ஜெப்பூர், செப். 27—

இராஜஸ்தான் மாநில பஞ்சாலை அதிபர்கள் சங்சத்தின் கூட்டம் செப். 13ம தேதி ஜெய்ப்பூரில் நடைபெற்றது.

அந்தக் கூட்டத்தில் கலந்து கொண்டனிய வர்த்தகத் துறை அமைச்சகத்தின் துணைச் செயலாளர் திரு. கே கிஷோர் என்பவர் பேசுகையில். துணிகளின் விலை உயர்வைக் கட்டுப்படுத்தவும், ஏற்றுமதியை அதிகரிக்கவும் பாடுபடவேண்டும் என்று தொழிலதிபர்களைக் கேட்டுக்கொண்டார்.

இப்போதிருக்கும் பஞ்சாலைகள் பழைய காலத்து ஓட்டை உடைசல் இயந்திரங்களைக் கொண்டவை.

இதனல்தான் பஞ்சாலைகளில் உற்பத்திச் செலவு அதிகரிக்கிறது.

புத்தம் புதிய நவீன தறிகளையும்பெரும்இயந்திரகளையும் புகுத்தினல் உற்பத்திச் செலவை பெருமளவு குறைக்கலாம் என்று ஆலோசனை கூறியிருக்கிருர்.

இந்த நவீன இயந்திரங்களை வாங்குவதற்கு பணம் திரட்டும் வழியையும் தொழில் அதிபர்களுக்கு கூறினர்.

### பகற்கொள்ளை

தற்போது பருத்தியின் விலை 20 சதமானம் வீழ்ச்சியடைந்திருக்கிறது. இதனல் பஞ்சாலை அதிபர்களுக்கு ஆண்டுதோறும் ரூ. 100 கோடி லாபம் கிடைக்கிறது.

அதே சமயத்தில் துணியின் விலையும், நூலின் விலையும் 9 சதமானத்திலிருந்து 20 சதமானம் வரை உயர்ந்திருக்கிறது. இந்தசந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி தொழிலதிபர்கள் நிதியை சேர்த்துக் கொள்ளலாம்.

இந்த நிதியை வைத்துக் கொண்டு நவீன இயந்திரங்களை வாங்கலாம் என்று ஆலோசனை கூறியுள்ளார்.

நவீன இயந்திரங்களைப் புகுத்தி தொழிலாளிகளை வேலையிலிருந்து விரட்டவும், விலைஉயர்வை பயன்படுத்தி கொள்ளையடிக்கவும் முதலாளிகளுக்கு வழி சொல்லித் தருகிகிருர் அமைச்சகத்தின் செயலர்.

## ஆசிரியருக்கு...

## இது நீதியா?

ஐயா,

தமிழ்நாடு மின்சார வாரியத்திற்கு கடந்த பிப்ரவரி மாதம் சுமார் 3 ஆயிரம் இளநிலை உதவியாளர், காசாளர் தட்டெழுத்தர் முதலான பதவிகளுக்கு விண்ணப்பம் கோரப்பட்டு சுமார் லட்சம் பேர் விண்ணப்பித்தார்கள். அவர்களில் ஆயிரக்கணக்கானோர் மின்வாரியத்தில் பணிபுரியும் தினக்கூலி ஊழியராவர். நெல்லை மின்திட்டத்தில் சுமார் 6 வருட சர்வீசுக்கும் மேற்பட்டோர் (தினக்கூலி ஊழியர்) நூற்றுகணக்கானவாகளுக்கு தற்பொழுது நடைபெற்றது வரும் நேர்முகத் தேர்வுப் போட்டிக்கு அழைப்புவிடுக்கப்படவில்லை. ஏனெனில் 25 வயகைத்த கடந்து விட்டதாகவும், ஒரு மார்க் குறைந்துள்ளது எனவும் காரணங்கள் கூறப்படுகின்றன.

மின்வாரியத்தையே நம்பி 5 வருடங்களுக்கு முன்பாகவே தினக்கூலி ஊழியராக சேர்ந்த நபர்களுக்கு ஓரிரு மாதம் வயது கூடிய காரணத்திற்காகவும். ஓரிரு மார்க் குறைந்த காரணத்திற்காகவும் சலுகைகள் காட்டப்படாமல்-சமீபத்தில் பாஸ் செய்து வாரியத்தில் சேர்ந்து 240 நாள் சர்வீஸ் கூட ஆகாத நபர்களுக்கு அழைப்பு வந்துள்ளது. இவர்களுக்கு வாரியத்தில் பணிபுரிவோர் எனக்கருதி சலுகைகள் காட்டப்படுவது நியாயமல்ல.

ஏனெனில் வாரியம் 4 வருடம் சர்வீஸ் முடிந்த தற்காலிக தினக்கூலி ஊழியர்களில் ஓரிரு மார்க்குள் குறைந்த பலருக்கு தமிழ்நாடு சர்வீஸ் கமிஷன் பரீட்சை எழுத சிபாரிசு சர்ட்டிபிகேட் கொடுத்துள்ளது. சர்வீஸ் கமிஷன் பரீட்சை எழுத சர்டிபிகேட் கொடுத்தும் வாரியம், ஓரிரு மார்க்குகள் குறைந்த நபர்களுக்கு சிறிது சலுகைகள் தர மறுப்பதேன்? வாரியத்தில் பணிபுரிவோருக்கு சலுகைகள் என்ற பெயரால் சர்வீஸ் குறைத்த நபர்களுக்கு சலுகைகள் காட்டப்பட்டால் வாரியத்துடன் வரிந்துகட்டி போராட அனைத்து சங்கங்களும் பாடுபடவேண்டும்.

வாரியத்தில் பணிபுரியும் 5 வருட சர்வீசுக்கும் மேற்பட்ட தினக்கூலி ஊழியர்களுக்கு வயது, மார்க் வரம்புகளை சிறிதுதளர்த்தி அவர்களுக்கு ஆதரவுதர வாரியம் முன்வரவேண்டும். இல்லையேல் வாரியத்தில் பணி புரிவோர், அல்லாதார் என வேறுபாடின்றி தகுதி அடிப்படையில் நியாயமாக ஆட்கள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென வேண்டிக் கொள்கிறோம்.

இபபடிக்கு
பாதிக்கப்பட்டோர்
சங்கரன்கோவில்பகுதி.

## அறுவடை செய்ய அனுமதிப்பார்களா?

ஐயா,

உத்தமபாளையம் தாலுகா கூடலூரை அடுத்துள்ள படுகைக் காட்டில் பல வருடங்களாக 48 விவசாயக் குடும்பங்கள் 95 ஏக்கர் நிலத்தில் சாகுபடி செய்து வருகிருர்கள்.

பயிர்கள் விளைந்து, அறுவடைக்குத் தயாராக இருக்கும் இச்சமயத்தில் போலீஸாரை நிறுத்தி வைத்து அறுவடை வேலைகளைச் செய்ய விடாது, தற்போது அந்த விவசாயிகள் தடுக்கப்படுகின்றனர்.

கலெக்டர் வந்து பார்வையிடும் வரை விவசாயிகளை அறுவடை செய்ய அனுமதிக்கமாட்டோம் என்று போலீஸார் கூறுகின்றனர்.

இங்நிலையில் சாமையும், இதர வேளண்மையும் முதிர்ந்து அழிந்துவிடுமென்றும், அதன்மூலம் 48 விவசாயக் குடும்பங்களும் பெரும் நஷ்டத்தை அடைந்து, அழிவை எதிர்நோக்க வேண்டியது ஆகிவிடுமென்றும் அஞ்சுகிறோம்.

ஆகவே, அந்த விவசாயிகள் தங்களது வேளாண்மையை அறுவடை செய்து கொள்ள உடனடியாக அனுமதி வழங்கி அவர்களை பாதுகாக்கும்படியும், அத்துடன் வெகுவிரைவிலேயே கலெக்டரவர்கள் அந்த ஸ்தலத்தை நேரில் பார்வையிட்டு, விவசாயிகளின் உரிமைகளைப் பாதுகாக்குமாறும் கேட்டுக் கொள்கிறோம்.

உண்மையுள்ள,
வீ. சொககலிங்கம்,
செயலாளர்,
உத்தமபாளையம்—
பெரியகுளம் தாலுகா
விவசாயிகள் சங்கம்.

## வில்லாம்பட்டி விவசாயத் தொழிலாளர்கள் கூலி உயர்வுப் போராட்டம் வெற்றி

பூதலூர், செப். 27—

பூதலூரையடுத்த வில்லாம்பட்டி விவசாயத் தொழிலாளர்கள் தஞ்சை முத்தரப்பு மாநாட்டு முடிவுப்படி கூலி உயர்வு கோரி கடந்த செப். 10-ம தேதி முதல் போராடி வந்தார்கள். நிலச்சுவான்தார்கள் "கூலி உயர்வே கொடுக்க முடியாது" என பிடிவாதமாக எதிர்த்து நின்றதால் தொழிலாளர்கள் பூரண மாக வேலை நிறுத்தம் செய்தார்கள்.

இறுதியாக 22.9-72அன்று இரவு தஞ்சை தாசில்தார் திரு கோவிந்தராசு, செங்கிபட்டி வருவாய்த்துறை ஆய்வாளர் திரு வெங்கட்ராமன் ஆகியோர் வந்து விவசாயத் தொழிலாளர்கள் பிரதிநிதிகளையும், நிலச் சுவான்தார் பிரதிநிதிகளையும் கொண்ட கூட்டுக் கூட்டத்தைக் கூட்டினர்கள். விவசாயத் தொழிலாளர்கள் சார்பில் தோழர்கள் சிங்கராயர்; சவுரிமுத்து மற்றும் பல முக்கிய தோழர்கள் கலந்து கொண்டதுடன் 200-க்கும் மேற்பட்ட ஆண், பெண் தொழிலாளர்களும் பங்கெடுத்திருந்தார்கள். தஞ்சை மாவட்ட விவசாயிகள் சங்கத்தின் சார்பில் தோழர் என்.வெங்கடாசலம், தோழர் கே. ரெத்தினம் ஆகியோர் வந்திருந்தார்கள்.

நிலச்சுவான்தார்கள் கூலி உயர்வு போராட்டத்தை உடைக்க எவ்வளவோ சாகஸங்களைக் கையாண்டும் முடியவில்லை,

இறுதியாக தாசில்தார் முன்பாக கீழ்க்கண்ட ஒப்பந்தம் ஏற்பட்டது. அதன்படி ஆண் விவசாயத் தொழிலாளர்களுக்கு தினசரி கூலி ரூ. 3-10, பெண் விவசாயத் தொழிலாளிக்கு தினசரி கூலி— 2-10.

### இதற்கு முன்பிருந்த கூலி விவரம்:

ஆண் தொழிலாளிக்கு தினசரி இருந்தது. ரூ. 2-00, பெண் தொழிலாளிக்கு தினசரி இருந்தது. ரூ. 1-25 (சிலசமயங்களில் ரூ. 1-00ம் கொடுப்பதுண்டு).

இந்த ஒப்பந்தத்தின் மூலம் சராசரியாககிடைக்கும்கூலி உயர்வு: ஆண் தொழிலாளிக்கு ரூ. 1—10-ம், பெண் தொழிலாளிக்கு ரூ. 0-85 லிருந்து ரூ.1-10வரை அதிகமாகக் கிடைக்கும.

12 தினங்களாக ஒன்றுபட்டு நின்று உறுதியாகப் போராடிய விவசாயத் தொழிலாளர்களுக்கு தோழர் என். வெங்கடாசலம் நன்றி கூறினர்.

## அரசு ஊழியர் கூட்டம்

உதகை செப். 29—

நீலகிரி மாவட்ட என். ஜி. ஓ. சங்கக் கூட்டம் நில அளவை அமைச்சு பணியாளர் சங்கத் தலைவர் திரு. எஸ். கே. சோமசுந்தரம் தலைமையில் நடைபெற்றது. நீலகிரி மாவட்ட என். ஜி. ஓ. சங்க நிர்வாகிகளாக கீழ்க்கண்டவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். தலைவர் பி. ஜெயராமன், துணைத் தலைவர் எஸ். சின்னச்சாமி, செயலாளர் ந. கோதண்டபாணி, இணைச் செயலாளர் சண்முகம், பொருளாளர் டி. சிவன், மத்திய செயற் குழு உறுப்பினராக செயலாளர் என். கோதண்டபாணி ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

புதிய நிர்வாகிகளைப் பாராட்டி பல இலாவைச் சேர்ந்தவர்கள்பேசினர்கள்.

## கோவணப் போராட்டம் நடத்த மில் தொழிலாளர் முடிவு

புதுக்கோட்டை, செப்: 27—

புதுக்கோட்டை டெக்ஸ்டைல் மில்லில் தொழிலாளர்கள் சம்பளம் குறைக்கப்பட்டிருப்பதை எதிர்த்து கோவணப் போராட்டம் நடத்ததீர்மானித்துள்ளனர்.

மில் நிர்வாகம் மாதா மாதம் தொழிலாளர்களின் சம்பளத்தில் ரூ. 100 குறைத்து விட்டது. ஒவ்வொரு தொழிலாளிக்கும் 69-70-ம் வருட கேசுவல்லீவு பாக்கியும், போனஸ் பாக்கியும் ஒவ்வொரு தொழிலாளிக்கும் ரு. 250 வரை தர வேண்டியுள்ளது.

இந்த நிலைமையில் தொழிலாளர்கள்தீபாவளி கொண்டாட முடியவில்லை.

விரக்தியடைந்த தொழிலாளர்கள் மில்லுக்குள் ஆடையின்றி கோவணம் மட்டும் கட்டிக்கொண்டு வேலை செய்யவும் அதற்குப் பின்னரும் நிர்வாகம்வழிக்கு வராவிட்டால் எந்த ஆடையும் இல்லாமல்வேலை செய்யவும் பின்னர் "கெரோ" போராட்டம் செய்யவும் முடிவு செய்யப்பட்டுள்ளது.

செப். 23-ம் தேதி நடைபெற்ற மூன்று ஷிப்டுகளையும் சேர்ந்த தொழிலாளர்கள் கூட்டத்தில் இந்தமுடிவு எடுக்கப்பட்டதாக திருச்சி ஜில்லா பஞ்சாலைத் தொழிலாளர் சங்கச்செயலாளர் தோழர் எஸ்.சுப்பிரமணியம் அறிவித்துள்ளார்.

## கார்சேரி விவசாயிகளுக்கு ஆதரவாக ஆர்ப்பாட்டம்

சமயநல்லூர், செப். 27—

மதுரைத் தாலுகா சமயநல்லூரில் செந்திவடிவேல் தலைமையில் ஆலைத் தொழிலாளர்களும் விவசாயிகளும் சேர்ந்து இன்று ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடத்தினர்.

கார்சேரி விவசாயிகளை நிலத்தைவிட்டு வெளியேற்றுவதைக் கண்டித்தும், போலீசின் நிலச்சுவான்தார் ஆதரவுப் போக்கைக் கண்டித்தும், விவசாயிகள் மீது போட்டுள்ள வழக்கை வாபஸ் வாங்கக் கோரியும் சட்டத்திற்குப் புறம்பாகச் சென்ற போலீஸ்மீது நடவடிக்கை எடுக்கக் கோரியும் கோஷங்களை எழுப்பிக் கொண்டு ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடத்தினர்.

மாயாண்டிபட்டி விவசாயிகளும் இன்று இக்கோஷங்களுடன் ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடத்தினர். மதுரைப் பாண்டி இதற்குத் தலைமை வகித்தார்.

## தீபாவளி அட்வான்சை ரூ. 150 ஆக உயர்த்துக

### மதுரை மாநகராட்சிக் கூட்டத்தில் வெ. வீரபத்திரன் கோரிக்கை

மதுரை, செப். 25—

சுகாதார ஊழியர்களுக்கு தீபாவளி பண்டிகை முன்பணம் ரூ. 75 கொடுக்கலாம் என்ற அரசின் ஆணை மீது ரூ. 100 கொடுக்கலாம் என சிபார்சு செய்யும் மாநகராட்சிக் குறிப்பின் மீது தோழர் வீரபத்திரன் பேசினர்.

இன்றுள்ள விலைவாசி உயர்வில் சுகாதாரத் தொழிலாளர்களுக்கு ரூபாய் நூற்றி ஐம்பதாவது கொடுப்பதுதான் அவர்கள் குடும்பம் தீபாவளி கொண்டாடுவதற்கு உதவியாக இருக்கும். இப்படிக் கொடுத்து அவர்கள் சம்பளத்தில் மாதா மாதம் பிடித்துக் கொள்வதால் எவ்விதச் சிரமமும் இராது என்று குறிப்பிட்டார்.

### சுகாதார ஊழியர் கோரிக்கைகளை நிறைவேற்றுக

இதற்கு பதில் அளிக்கும் வகையில் ரூபாய் நூறுக்கு மேல் கொடுக்க முடியாது என்று மேயர் கூறிவிட்டார்.

அடுத்து சுகாதார ஊழியர்களின் கோரிக்கைகளான பஞ்சப்படியை அடிப்படை சம்பளத்துடன் இணைப்பது, அவர்களுக்கு வீடு கட்டித்தருவது. வீட்டுக்காக—மனை இடம் வழங்குவது முதலிய கோரிக்கைகள் நெடு நாட்களாக கவனிக்கப்படாமல் தேங்கியுள்ளது. அவைகளை சுகாதார கமிட்டிக்கு அனுப்பி பரிசீலித்து முடிவுகள் எடுக்க வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார்.

### சாலை அமைப்பு ஊழியர்களை நிரந்தரமாக்குக

சாலை அமைப்புப் பராமரிப்பு கேங்கு கூலிகள் 1000 பேர் வேலை பார்த்து வந்தனர். தற்போது அவர்கள் 500 பேர்களாகக் குறைக்கப்பட்டு விட்டனர். இவ்வாறு பாதியாக குறைக்கப்பட்டுவிட்ட காலத்திலாவது அவர்களுக்கு மாதம் பூராவும் வேலை கொடுக்கவும், அவர்களை நிரந்தரமாக்கவும் வேண்டுமென்று தோழர் வீரபத்திரன் வலியுறுத்தினர்.

### போலீஸ் காவல் ஏன்?

மாநகராட்சி கூட்டம் நடந்து கொண்டிருக்கையில், மாநகராட்சி மன்ற வாயில் சப்-இன்ஸ்பெக்டர்கள் உட்பட ஏராளமான போலீசார் நிறுத்தப்பட்டிருப்பதற்கு தோழர் வீரபத்திரன் ஆட்சேபனை தெரிவித்தார். இது மன்றத்திற்கு அவமானகரமானது என்றும் குறிப்பிட்டார்.

## விலைவாசி உயர்வு-வேலையில்லா திண்டாட்ட எதிர்ப்பு

## தஞ்சை மாவட்டம் தயாராகிறது

# மறியலில் 6 ஆயிரம் பேர் பங்கு கொள்ளுவர்

திருவாரூர், செப், 26—

இந்திய கம்யூனிஸ்ட்கட்சி (மார்க்சிஸ்ட்)யின் தஞ்சை மாவட்டக் குழுவின் விரிவடைந்த கூட்டம் திருவாரூரில் 25—9—72-ல் நடந்தது. அக்கூட்டத்தில் கட்சியின் அரசியல் தலைமைக்குழு உறுப்பினர் தோழர் பி ராமமூர்த்தி விலைவாசி உயர்வு, வேலையில்லாத் திண்டாட்டம் இவைகளின் காரணங்களை விளக்கிப் பேசினார். இதில் தமிழ் மாநில செயற்குழு உறுப்பினர் தோழர் ஆர். ராமராஜும் கலந்து கொண்டார். கூட்டம் தொடங்கியவுடன் படுகொலை செய்யப்பட்ட கேரள மாநில செயற்குழு உறுப்பினர் தோழர் அழிக்கோடன் ராகவனுக்கு அஞ்சலி செலுத்தும் வகையில் 5 நிமிடங்கள் மௌனம் அனுஷ்டிக்கப்பட்டது.

விலைவாசி உயர்வு, வேலையில்லாத் திண்டாட்டம் இவைகளை எதிர்த்து பிரச்சாரங்கள், உண்ணாவிரதம், மறியல், ஆர்ப்பாட்டங்களை நடத்துவது குறித்து கீழ்க்கண்டவாறு முடிவு செய்யப்பட்டது.

### பிரச்சாரம்

1. தஞ்சை மாவட்டத்திலுள்ள 36 பஞ்சாயத்து ஒன்றியங்கள், 7 நகர் மன்றங்கள் ஆக மொத்தம் 43 இடங்களிலும் அக்டோபர் 3 முதல் 8 ஆம் நாள் வரை உண்ணாவிரதம் நடைபெறும். இந்த நாட்களில் விலைவாசி உயர்வு, வேலையில்லா திண்டாட்டங்களுக்கான காரணங்களை விளக்கி விரிவான பிரச்சாரங்கள் நடைபெறும்.

### ஆர்ப்பாட்டம்

2. அக்டோபர் 10-ஆம் நாளில் தஞ்சை மாநகரில் பொலிட் பீரோ உறுப்பினர் தோழர் பி. ராமமூர்த்தி தலைமையில் மத்திய - மாநில அரசு அலுவலகங்களின் முன்பு மாபெரும் ஆர்ப்பாட்டம்நடைபெறும்.இந்தஆர்ப்பாட்டத்துக்கு மாவட்ட முழுவதிலுமிருந்து 50,000க்கும் அதிகமானோர் தஞ்சைக்கு வந்து சேருவர். அன்று மாலை தஞ்சை திலகர் திடலில் நடைபெறும் பொதுக்கூட்டத்தில் தோழர் பி. ராமமூர்த்தி பேசுவார்.

அக்டோபர் 18, 19, 20ம் தேதிகளில் கீழ்க்கண்ட 37 இடங்களில் உள்ள மத்திய-மாநில அரசு அலுவலகங்களின் முன் வெகுஜன மறியல் போராட்டம் நடைபெறும். அதாவது:—

சீர்காழி பொறையார். செம்பனார்கோவில்,மாயூரம், குத்தாலம், திருமருகல், பேரளம், நன்னிலம், குடவாசல், கொரடாச்சேரி, திருவாரூர், மாவூர், கீவளூர் கீழையூர், நாகப்பட்டிணம் நாகூர், தலைஞாயிறு, வேதாரண்யம்,திருத்துறைபூண்டி கச்சனம், கூத்தாநல்லூர், கோட்டூர், மன்னார்குடி, நீடாமங்கலம், திருபுவனம், கும்பகோணம், திருச்சேறை, வலங்கைமான், பாபநாசம்,அம்மாபேட்டை, தஞ்சாவூர், திருக்காட்டுப்பள்ளி, பூதலூர், பட்டுக்கோட்டை, ஒரத்தநாடு மணமேல்குடி காரைக்கால் முதலிய ஊர்களில் மறியல் போராட்டம் நடைபெறும். இம்மூன்று நாட்கள் மறியல் போராட்டத்திலும் சுமார் 6000க்கும் அதிகமானோர் பங்கேற்பர்.

### முதல் நாள் (3-10-72) உண்ணுவிரதக் குழுவிற்கு தலைமை தாங்கும் மாவட்டக் குழு உறுப்பினர்கள்.

| | | |
|---|---|---|
| கும்பகோணம் | — | கோ. பாரதி மோகன் |
| மாயூரம் | — | கோ. வீரய்யன் |
| கோட்டூர் | — | பி. எஸ். தனுஷ்கோடி |
| கீவனூர் | — | வி. கே. முத்துசாமி |
| திருத்துறைப்பூண்டி | — | ஆர். கோவிந்தசாமி |
| திருவாரூர் | — | எம். செல்லமுத்து |
| நீடாமங்கலம் | — | ஏ. கே. கணேசன் |
| மன்னார்குடி | — | சி. காசிநாதன் |
| திருக்காட்டுப்பள்ளி | — | என். வெங்கடாசலம் |
| அமமாப்பேட்டை | — | பி. எஸ். சீனிவாசன் |
| குடவாசல் | — | எஸ். கணேசன் |
| நாகப்பட்டிணம் | — | வி. தம்புசாமி |

### முதல்நாள் (18-10-72) மறியல் போராட்டத்திற்கு தலைமை தாங்கும் மாவட்டக் குழு உறுப்பினர்கள்

| | | |
|---|---|---|
| நாகப்பட்டிணம் | — | கோ. வீரய்யன் |
| மன்னார்குடி | — | வி. கே. முத்துசாமி |
| சீர்காழி | — | ஏ. கே. கணேசன் |
| குடவாசல் | — | எம். துரைசாமி |
| திருத்துறைப்பூண்டி | — | வி. தம்புசாமி |
| திருக்காட்டுப்பள்ளி | — | என். வெங்கடாசலம் |
| குத்தாலம் | — | வி. ஆர். செல்லப்பன் |
| தஞ்சாவூர் | — | பி. எஸ். தனுஷ்கோடி |
| கும்பகோணம் | — | ஆர். கோவிந்தசாமி |
| கூத்தாநல்லூர் | — | சி. காசிநாதன் |
| கீவனூர் | — | எஸ். கணேசன் |
| மாவூர் | — | எம். செல்லமுத்து |
| திருப்புவனம் | — | பி. எஸ். சீனிவாசன் |

உண்ணாவிரதம், மறியல் போராட்டங்களில் பங்கு கொள்ளும் மற்ற தோழர்களின் பட்டியல் அடுத்து வெளியிடப்படும்.

இந்திய கம்யூனிஸ்ட்கட்சி (மார்க்சிஸ்ட்) நடத்தும் இம் மாபெரும் இயக்கங்களிலும், போராட்டங்களிலும் அனைவரும் பங்குகொள்வதுடன் தங்கள் நல்லாதரவையும் வழங்குமாறு இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தஞ்சை மாவட்டக் குழு கேட்டுக்கொள்கிறது.

## நியாயவிலைக் கடைக்கு வந்த சீனி மூடைகள் மறைந்த மாயம்!

# மக்கள் ஆர்ப்பாட்டம்

மதுரை, செப். 27—

தங்களுக்கு முறையாக சீனி வழங்கப்படாததைக் கண்டித்து, பொன்மேனி பகுதியைச் சேர்ந்த மக்கள் மார்க்சிஸ்ட் கட்சி தலைமையில் ஆர்ப்பாட்டம் செய்தனர்.

மதுரைதெற்குத் தாலுகா, பொன்மேனி பேரூராட்சியைச் சேர்ந்த 8 நியாய விலைக்கடைகளுக்கு கடந்த 19—9—72-ந் தேதி 32மூடைகள் சீனி வந்துள்ளது. ஒரு கிலோ சீனிகூட விநியோகிக்காமல் கள்ளமார்க்கெட்டில் விற்று கொள்ளைலாபம் அடிக்கப்பட்டது.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி பெத்தானியாபுரம் கிளைத்தோழர்கள் இதைக் கண்டுபிடித்து, மதுரை மாவட்ட கலெக்டர், மாவட்ட விநியோக அதிகாரி, ஆர் டி ஓ ஆகியோருக்கு 22—9—72ந் தேதி தந்தி மூலம் தகவல் அனுப்பினர். மேலும் அப்பகுதியில் 200-க்கு மேற்பட்ட பெண்கள் உட்பட ஏராளமான மக்களைத் திரட்டி கடைகளுக்கு முன்னால் ஆர்ப்பாட்டம் நடத்தப்பட்டது.

ஒரு கடையில் பில் புக்கைப பார்த்தபோது 20, 21ந் தேதிகளில் 400 கிலோ சீனி விநியோகிக்கப்பட்டதாக பில் போட்டு கிழிக்கப்பட்டிருந்தது கண்டு பிடிக்கப்பட்டது.

26—9—72-ம் தேதி கையெழுத்திடப்பட்ட மகஜரை மாவட்ட விநியோக அதிகாரியிடமும், கலெக்டரின் தனி உதவியாளரிடமும் கொடுத்து கொள்ளை அடித்த விபரம் எடுத்துக் கூறப்பட்டுள்ளது. தக்த நடவடிக்கை எடுத்து, சீனி முறையாகக் கிடைக்க ஆவன செய்வதாக அதிகாரிகள் கூறியுள்ளனர்.

## "செம்மலர்"

### சந்தாதார்கள், ஏஜெண்டு தோழர்கள் முக்கிய கவனத்துக்கு

தோழர்களே!

செம்மலர் மாத இதழ் பிரதி மாதமும் 6-ந் தேதியன்று வெளிவருகிறது. எனவே பாக்கிகளை உடனடியாக 5-ந் தேதிக்குள் அனுப்பி வைக்க வேண்டுகிறோம்.

மேலும் 6-ந் தேதிக்குப் பிறகு பணம் வந்தால் பத்திரிகை அனுப்ப இயலாது. காரணம் பத்திரிகை அனுப்புவதற்கான தபால் கட்டணச் சலுகை 6, 7 தேதிகளில் மட்டுமே. எனவே 5-ந் தேதிக்குள் பணத்தை அனுப்பிவைத்து, செம்மலர் கிடைப்பதற்கு உத்தரவாதப்படுத்திக் கொள்ளுங்கள்.

நிர்வாகி,
செம்மலர்.

## 80 ஆயிரம் பாகிஸ்தான் தொழிலாளர் போராட்டம்

கராச்சி, செப். 27—

பாகிஸ்தானில் 80ஆயிரம் தொழிலாளர்கள் கலந்து கொண்ட பிரும்மாண்டமான வேலை நிறுத்தம் நடைபெறுகிறது.

கராச்சி நகரைச் சுற்றியுள்ள 150 தொழிற்சாலைகளில்பணிபுரியும் 80ஆயிரம் தொழிலாளர்கள் ஒன்றுபட்டு மகத்தான இந்தவேலை நிறுத்தத்தில் ஈடுபட்டுள்ளனர்.

கராச்சி நகரிலுள்ள கனரக இயந்திர உற்பத்தித் தொழிற்சாலையில் வேலை பார்க்கும் தொழிலாளர்களையும் மற்றும் 8 தொழிற்சாலைகளில் வேலை செய்யும் தொழிலாளர்களையும் கைது செய்ததைக் கண்டித்தே இந்த பிரும்மாண்டமான வேலை நிறுத்தம் நடைபெறுகிறது.

### பழி வாங்கலுக்கு கண்டனம்

80 ஆயிரம் தொழிலாளர்களின் இந்த வேலைநிறுத்தப் போராட்டம்பாகிஸ்தானையே ஒரு குலுக்கு குலுக்கி விட்டது.

நகரமே வெறிச்சோடிக் கிடக்கிறது. எங்கும் கெடுபிடி நிலைமை நிலவுகிறது. பாகிஸ்தான் தொழிலாளி வர்க்கம் தங்கள் ஒற்றுமையின் பலத்தை உணர ஆரம்பித்து விட்டனர்.

சென்ற வாரம்தான்கராச்சியில் 18 ஆயிரம் துறைமுகத் தொழிலாளர்களின் பிரும்மாண்டமான போராட்டம் வெற்றியுடன் நடந்து முடிந்தது.

இதைக்கண்டு ஆத்திரமுற்ற ஆளும் வர்க்கங்கள் தொழிற்சங்க இயக்கங்களை நசுக்க பழி வாங்கும் நடவடிக்கையில் இறங்கினர்.

ஆளும் வர்க்கத்தினருக்கு சரியான பாடம் கற்பிக்கும் முறையில் கராச்சியில் 80 ஆயிரம் தொழிலாளர்கள் பழிவாங்கலை எதிர்த்து மாபெரும் வேலை நிறுத்தப் போராட்டத்தை நடத்திக் கொண்டிருக்கின்றனர்.

## நெல்லை மின் திட்ட ஊழியர் குழு முடிவுகள்

நெல்லை, செப். 28—

தமிழ்நாடு மின்சார ஊழியர் சங்கம், திருநெல்வேலி திட்டக்கிளையின் நிர்வாகக் குழுக் கூட்டம் 24—9—72 பாளையங்கோட்டை பயணிகள் விடுதியில் நடைபெற்றது. தோழர் ஏ நடராசன் தலைமை வகித்தார். திட்டச் செயலாளர் தோழர் வி கணபதிராமன் கடந்த ஆறுமாத கால சங்கசெயல் முறை. வளர்ச்சி பற்றியும், மத்திய அமைப்பு முடிவுகளை அமுல் நடத்துவதுபற்றியும் அறிக்கை சமர்ப்பித்தார்.

பொருளாளர் தோழர் எம் சங்கரராஜ பாண்டியன், நிர்வாகக்குழு உறுப்பினர்கள் ஆர் எம் பரமசிவம், எஸ் ராசாமணி, டி பி வாசுதேவன் ஆகியோரின் கருத்து செறிந்த விவாதத்திற்குப்பின் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

1) மத்திய அமைப்பு முடிவுகளை அமுல் நடத்தி ஒற்றுமை பேரணி கூட்டி 4—10—72 அன்று ஒவ்வொரு வருவாய் பிரிவிலும் ஊழியர் சங்கத்துடன் சேர்ந்து காலையில் ஒலி முழக்கம் செய்து,மாலையில் ஊர்வலம் பொதுக்கூட்டம் நடத்துவது.

2) சங்கத்திற்கு "கனரா வங்கியில்" கணக்கு ஆரம்பிப்பது.

3) வள்ளியூர், தக்கலை, கோவில்பட்டி, கடையநல்லூர் ஆகிய பகுதிகளில் அக்டோபர் இறுதிக்குள் கிளைகளை ஆரம்பிப்பது.

4) போனஸில் ரூ. 10 நன்கொடையாக ஒவ்வொரு உறுப்பினரிடமும் வசூலிப்பது. ஆகிய தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன.

## தமிழகம் முழுவதும் பாலிடெக்னிக்

# மாணவர் வேலைநிறுத்தம்

### அவலநிலையை போக்க ஆர்த்தெழுந்துவிட்டார்கள்

## சர்வகட்சித் தலைவர்களுக்கும் வேண்டுகோள்

மதுரை, செப். 28—

தமிழகம் முழுவதிலுமுள்ள பாலிடெக்னிக் மாணவர்கள் காலவரையற்ற வேலை நிறுத்தப் போராட்டத்தில் இறங்கியிருக்கிறார்கள். இது போலவே புதுவை மாநில பாலிடெக்னிக் மாணவர்களும் போராட்டத்தில் ஈடுபட்டுள்ளனர்.

தமிழ் நாட்டில் மதுரை, நாகர்கோவில், திருச்சி, காரைக்குடி, செட்டி நாடு, கோவை, பொள்ளாச்சி, வேலூர், புதுவை, சென்னை ஆகிய ஊர்களிலுள்ள எல்லா பாலிடெக்னிக்குகளும் கடந்த 10 நாட்களுக்கு மேலாகவே மூடிக் கிடக்கின்றன.

பல்வேறு தொழில்களையும் பயின்று கொண்டிருக்கும் பல்லாயிரக்கணக்கான மாணவர்கள் — பயிற்சியைத் தொடர்ந்து நடத்த முடியாத நெருக்கடி நிலை ஏற்பட்டுள்ளது.

நாட்டின் ஆயிரம் வகை ஆக்கப்பணிகளில் ஈடுபடுவதற்காக உருவாக்கப்படும் டிப்ளமா பொறியாளர்களுக்கு இந்த நிலைமை ஏற்பட்டிருப்பதானது, தொழில் துறையில் எந்த அளவுக்கு நெருக்கடி ஆழமாகியிருக்கிறது என்பதையே காட்டுகிறது.

இதனால் பிள்ளைகளின் படிப்பு நிலைமை குறித்தும், அவர்களின் எதிர்காலம் குறித்தும் பெற்றோர்கள் மிகுந்த கவலையில் மூழ்கியிருக்கிறார்கள்.

### கோரிக்கைகள்

வேலை நிறுத்தம் செய்து வரும் தமிழக பாலிடெக்னிக் மாணவர் சமுதாயத்தின் கோரிக்கைகள் தான் என்ன?

1) நாலரை ஆண்டு படிப்பினை 3 கல்வியாண்டுகளுக்குள் அதிகமான பயிற்சிகளையும், பாடப்பகுதிகளையும் கற்று முடித்து- டிப்ளமாவும் பெற்றபின் மேற்கொண்டு பொறி இயல் கல்லூரிகளில்சேர்ந்து குறுகிய காலத்தில் பட்டப் படிப்பு படிக்க வசதி செய்யப்பட வேண்டுமென்று கோருகிறார்கள்.

இந்திய நாட்டின் கல்வி முறையில் மேற்படிப்பு இல்லாதது எதுவுமே இல்லை. ஆனால், பாலிடெக்னிக் டிப்ளமா கல்வி முறையில்மட்டும் மேற்படிப்பு வசதியறிவு அவல நிலையில் உள்ளது. இந்தக் குறையைப் போக்க வேண்டும் என்றுதான் போராடுகிறார்கள்.

### பையன் கிழவனாகி விடுவான்

2) அடுத்து, பகுதி நேரப் பட்டப்படிப்புக்கு கோரப்படும் முன் வேலை அனுபவத்தை நீக்க வேண்டுமென்று கோருகிறார்கள். ஏனெனில் பாலிடெக்னிக்கில் படித்து முடித்த மாணவர்கள் ஏதாவது ஒரு தொழிற்சாலையில் 5 வருடம் நிரந்தர வேலை செய்து அனுபவம் பெற்ற பிறகுதான் பகுதி நேரப் பட்டப்படிப்பு பயில முடியும் என்று அரசு நிர்ப்பந்திக்கிறது.

வேலையில்லாத் திண்டாட்டம் தலைவிரித்தாடும் இக்காலத்தில், டிப்ளமாதாரர்களுக்கு உடனடியாக வேலை கிடைத்திட உத்தரவாதம் உண்டா? கிடையாது. அப்படியே வேலை கிடைத்தாலும்5 ஆண்டுகள் நிரந்தரமாக அதே இடத்தில் வேலையில் அமர்த்திக்கொள்ளுவார்கள் என்பதற்கு என்ன உத்தரவாதம்?

ஒரு பேச்சுக்காக இந்த உத்தரவாதம் இருக்கிறது என்றே வைத்துக் கொண்டாலுங்கூட, பயிற்சிக் காலத்தையும, வேலைக்காக அலைந்து திரியும் காலத்தையும், அதற்குப்பின் தொழிற்சாலையில் சேர்ந்து பயிலும் 5 ஆண்டுகளையும் கணக்கிட்டால், உற்சாகமாய் கல்வி கற்கும் வயதிலிருந்து பையன் நெடுந்தூரம் போய் விடுவான்.

அதனால்தான் முன்வேலை அனுபவ நிபந்தனையை நீக்க வேண்டுமென்று கோருகிறார்கள்.

### உள் தேர்வு எதற்கு?

3) மற்றும் ஆண்டுத் தேர்வு என்ற முறை இருக்கும்போது, புதிதாகப் புகுத்தப்பட்டுள்ள உள் தேர்வு முறையானது மாணவர்களைப்பெரிதும் பாதிக்கிறது. இந்த முறையினால் மாணவர்களுடைய படிப்பை நிர்வாகம் கட்டுப்படுத்துகிறது. மாணவர்களின் கல்வித்தரமும் குறைகிறது.

அதனால்தான்,உள்தேர்வு முறையை ஒழிக்கவேண்டும் என்று மாணவர்கள் கோருகிறார்கள்.

4) செமஸ்டர் முறையினால், ஒரு மாணவன்— உடலாலோ, உள்ளத்தாலோ பாதிக்கப்பட்டு ஏதேனும் ஒரு செமஸ்டரில் தோல்வியுற்றால், டிப்ளமோ முதல் வகுப்பு தேர்வு என்பதை கனவிலும் காண முடியாது.

அதனால் கடைசி செமஸ்டரை மட்டும்வைத்து முதல் வகுப்பு,இரண்டாம் வகுப்பு என தரம் பிரிக்கக்கோரி வற்புறுத்துகிறார்கள்.

5) மற்றும் பாடத் திட்டத்துடன் இணைந்த கல்விச் சுற்றுலாவுக்கு பல்கலைக் கழகங்கள் பட்டப்படிப்புக்கு உதவி செய்வதைப் போல, தொழில் நுட்பக கல்விக் கழகமும் டிப்ளமா பொறியாளர்களுக்கு நிதி உதவி செய்ய வேண்டும்.

6) இறுதியாக, அவர்களின் வாழ்க்கைப்போராட்டத்தின் மிக மிக முக்கியமான கோரிக்கை: வேலை வேண்டும், வேலை கிடைக்கும் வரை உயிர்வாழ உதவித் தொகை வழங்க வேண்டும் என்பதாகும்.

### சர்வ கட்சியினரும் ஆதரவு தருக!

மாணவர்களின் இந்த நியாயமான கோரிக்கைகளை பெற்றோர்கள் அனைவரும ஆதரிக்க வேண்டுமென்றும்—சகல அரசியல் கட்சித் தலைவர்களும், தொழிற் சங்க, மாணவர் சங்கத் தலைவர்களும் ஆதரிக்க வேண்டுமென்றும்— ஆதரித்து இக்கோரிக்கைகளுக்கு இணங்குமாறு அரசினரை நிர்ப்பந்தித்து மாணவர்களின் எதிர்காலத்தைப் பாதுகாக்க வேண்டுமென்றும் வேண்டுகோள் விடுத்துள்ளார்கள்.

# அழிக்கோடன் கொலைக்கு கண்டனம்

மதுரை, செப். 28-

கேரள மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் செயற்குழு உறுப்பினரும், தொழிற்சங்கத் தலைவருமான தோழர் அழிக்கோடன் ராகவன் படுகொலை செய்யப்பட்டதைக் கண்டித்தும், அவருக்கு அனுதாபம் தெரிவித்தும் தமிழகத்தில் பல ஊர்களில் ஊர்வலமும் பொதுக் கூட்டமும் நடைபெற்றன.

தோழர் அழிக்கோடன் ராகவன் கொலை செய்யப்பட்டதைக் கண்டித்து 24-9-72 ஞாயிறு அன்று நெய்வேலி டவுன் ஷிப்பில் கட்சித்தோழர்கள். அனுதாபிகள் சுமார் 300 பேர் தீவட்டி ஏந்தி, ஸ்கியூ பாலத்திலிருந்து புறப்பட்டு மத்திய பஸ் நிலையம் சென்றனர். அங்கு தியாகி சிவராமன் திடலில் பொதுக் கூட்டமும் நடைபெற்றது

ஊர்வலத்தில் "இண்டிகேட் பாசிச ஆட்சி ஒழிக!" 'கேரள கூட்டணி அரசே ராஜினாமா செய்!' அரசியல் கொலை புரியம் இந்திராவின் பாசிச ஆட்சி ஒழிக!" "மந்திரி கருணாகரனைக்கைது செய்!" என கோஷமிட்டு ஆத்திரத்தோடு சென்றனர். மழை பெய்யத் தொடங்கியும் பொதுக்கூட்டம் 8-30 மணி வரைநடைபெற்றதுதோழர் சி. கே. சந்திரன் தலைமை வகித்தார்.

தோழர்கே.திருவேங்கடம் பேசுகையில், கேரள "நவாப்" பத்திரிக்கை ஆசிரியர் ராஜேந்திரன் கைதானதும், மந்திரி கருணாகரன் லஞ்ச ஊழல் கடிதத்தின் பின்னணியில் அழிக்கோடு ராகவனை வஞ்சம் தீர்க்க கேரள இண்டிகேட் முனைந்ததையும், வங்காள அடக்குமுறை.கொலைகள், நகர்வாலா கொலை, சாருமஜூம்தார்சிறைச்சாவு மர்மம் ஆகியவற்றை விளக்கிப் பேசினார்.மழை கடுமையானதால் அடுத்து பேச இருந்த தோழர் சி கோவிந்தராஜன் பேச முடியவில்லை.

### கோவையில் ஒரு மணி நேர வேலை நிறுத்தம்

மறைந்த தியாகி அழிக்கோடன் ராகவன் கொலை செய்யப்பட்டதைக் கண்டிக்கும் வகையில் கோவை ஸ்ரீரங்க விலாஸ் மில், பயனீர் மில், சந்திரா மில். ஆகிய மில்களில் பணியாற்றும் தொழிலாளர்கள் (சி ஐ டி யூ மற்றும் எல்லா சங்கங்களும்) ஒரு மணி நேரம் வேலை நிறுத்தம் செய்தனர்.

### வண்டிப்பெரியாரில்

கேரள கம்யூனிஸ்ட் (மார்க்சிஸ்ட்) கட்சியின் தலைசிறந்த தலைவர்களில் ஒருவரான தோழர் அழிக்கோடன் ராகவனை கத்தியால் குத்திக் கொல்லப்பட்டதை எதிர்த்தும், அனுதாபம் தெரிவிக்கும் வகையிலும் ஒரு பொதுக்கூட்டம் பகல் 1 மணிக்கு வண்டிப் பெரியாற்றில் இடிக்கி ஜில்லா கம்யூனிஸ்ட் (மார்க்சிஸ்ட்) கட்சி கமிட்டி அங்கத்தினர் தோழர் கே எஸ் கிருஷ்ணன் தலைமையில் நடைபெற்றது.

கூட்டத்தில் மற்றுள்ள கட்சிப்பிரதிநிதிகளாபர்கது கண்ணு, ஜி பாலன், எம் எம் உஷ்மான், ஜி சில்வஸ்ட்டார், கே ஜே தோமஸ், சி எம் வர்கீஸ் எம் ராஜூ, சி எம் மீராண்ணன், பி கே ஸ்ரீதரன் ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

கூட்டத்திற்கு முன் தோட்டத் தொழிலாளிகளும், அரசு காய்கறி பண்ணையில் வேலை செய்துவரும் தொழிலாளிகளும் வேலை நிறுத்தம் செய்து வண்டிப்பெரியார் நகரில் ஊர்வலம் நடத்தினர். நகரில் உள்ள எல்லாக் கடைகளும் அடைத்து 'ஹர்த்தால்' அனுஷ்டிக்கப்பட்டது.

### கூடலூரில்

கூடலூர் நகர் ஜனநாயக-வாலிபர் மன்றத்தின் கூட்டம் செப் 25ந்தேதி நகர் மார்க்சிஸ்ட் கட்சி ஆபீசில் நடந்தது.

தோழர் அழிக்கோடன் கொலைக்குக் கண்டனம் தெரிவித்துத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. மறைந்த தலைவருக்கு அஞ்சலி செலுத்தப்பட்டது.

## மதுரையில் தீப்பந்த ஊர்வலம்

மதுரை பெத்தானியாபுரத்தில் தோழர் அழிக்கோடன் ராகவன் படுகொலையைக் கண்டித்து செப். 26ம் தேதி யன்று உணர்ச்சி மிக்க தீப்பந்த ஊர்வலம் நடந்தது.

ஆவேசமிக்க அந்த தீப்பந்த ஊர்வலத்தில் ஏராளமானோர் தீப்பந்தங்களை ஏந்திக்கொண்டு சென்றனர்.

இந்தக் கண்டன ஊர்வலத்தில் பெத்தானியாபுரம், பாத்திமா நகர் கிளைத் தோழர்கள் பெருமளவில் கலந்து கொண்டனர். ஊர்வலத்தினர் தோழர். அழிக்கோடன் ராகவனின் படுகொலையை கண்டித்து உணர்ச்சி மிக்க கோஷங்களை எழுப்பினர்.

## நடக்க இருப்பவை

### திருநெல்வேலி— நாங்குனேரி பகுதி மார்க்சிஸ்ட் கட்சி கமிட்டி அமைப்புக் கூட்டம்

பாளையங்கோட்டையில் 2—10—72 அன்று நடைபெறும்.

தோழர்.

எஸ். பாலவிநாயகம் கலந்து கொள்வார்.

### நெல்லைமாவட்ட சி.ஐ.டி.யூ தொழிற் சங்க கவுன்சில் அமைப்புக் கூட்டம்

பாளையங்கோட்டையில் 2—10—72 அன்று நடைபெறும்.

தோழர்கள்

வி. கார்மேகம்
பி. சொரணம்
பி. சி. வேலாயுதம்
சு. பாலவிநாயகம்
எஸ். கே. பழனிச்சாமி
எம். குழந்தைவேல்
சா. சிதம்பரம்
மற்றும் பலர் கலந்து கொள்வார்கள்.

# கண்ணோட்டம்

## கொள்கை மாற்றம் கண்டால் குண்டாந்தடி ஒழுங்குபடும்

மேற்கு வங்கத்திலே 1967.ம் ஆண்டிலும் 1969-ம் ஆண்டிலும் ஐக்கிய முன்னணி அரசுகள் இருந்தது உங்களுக்குத் தெரியும். அந்த ஐக்கிய முன்னணி அரசுகளுக்கு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தலைமை தாங்கியதும் உங்களுக்குத் தெரியும். அவ்விரு ஐ. மு. அரசுகளிலும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர்கள் ஜோதி பாசு போலீஸ் மந்திரியாகவும், ஹரிகிருஷ்ணக் கோனார் ரெவினியூ மந்திரியாகவும், கிருஷ்ணபாத கோஷ் தொழிலாளர் நல மந்திரியாகவும் இருந்தார்கள் என்பதுவும் உங்களுக்குத் தெரியும.

இதெல்லாம் எதற்காக நினைவு படுத்துகிறேமென்ருல் - அந்த ஐக்கிய முன்னணி அரசுகளை இந்திரா காந்தி கவிழ்த்து இரண்டு மூன்று ஆண்டுகள் ஆகிவிட்டன அல்லவா? அந்தக்காலத்தில் நடந்தவைகளை மறந்து விடாமல் இருக்கவேண்டும்என்பதற்காகவேதான் நினைவுபடுத்துகிரேம்.

அதுவும் எதற்காக என்று கேட்கலாம். சொல்ல வேண்டிய ஒரு விஷயம் இருக்கு, அதற்காகத்தான்.

அதாவது அந்தக் காலத்திலே......அந்த ஐக்கிய முன்னணி அரசைப்பற்றி எத்தனை காபுரா செய்தார்கள் என்பதை மறந்திருக்கமாட்டீர்கள். அந்த ஐ. மு. அரசுக்கு முதலமைச்சராக இருந்த பங்களா காங்கிரஸ்தலைவர் அஜாய்முக்கர்ஜியே, அந்த அரசை காட்டுமிராண்டி அரசு என்று வசை பாடினுர்....., அந்த அரசில் அங்கம் வகித்த வலது கம்யூனிஸ்டுகளோ, "போலீஸ் இலாகாவை மார்க்சிஸ்டுகள் தமது கட்சி நலனுக்காகப் பயன்படுத்துகிருர்கள் என்றும், எதிர்க் கட்சிகளை அழிக்க வன்முறையில் ஈடுபடுகிருர்கள்"— என்றும் அவதூறு கூறினுர்கள்...... பெரு முதலாளிகளும். நிலப்பிரபுக்களும் அவர்களது பத்திரிகைகளும். "போலீஸ் படையே செயலற்றுவிட்டதாகவும் —இந்த ஆட்சியில் எங்கு பார்த்தாலும் கெரோ போராட்டங்களும், விவசாயிகள் கிளர்ச்சிகளுமாகத்தான் இருக்கிறது என்றும், எங்கும் அராஜகம்தான் தலைவிரித்துத தாண்டவமாடுவதாகவும்" எழுதித் தள்ளின......

இப்படி ஒரு பிரச்சாரப்புயலைக் கிளப்பிவிட்டு, அந்த ஐ. மு.அரசைக் கவிழ்த்துவிட்டார் இந்திரா காந்தி.

மேலோட்டமாகப் பார்த்தவர்களுக்கு "ஆமாம். எவ்வளவோ குழப்பமாக இருந்தது. கூட்டணிக் கட்சிகளுக்குள்ளே குடுமிப்பிடிச் சண்டையாக இருந்தது. அதனுல் அதுவாகவே கவிழ்ந்து போச்சு"—என்று தோன்றிற்று.

வர்க்கக் கண்ணோட்டம் இல்லாமல்—நல்லாருக்கும் பொல்லாருக்கும் நலமளிக்கும் நடுவாக உள்ளவர்களுக்கு உண்மை எப்படிப் புரியப் போகிறது?

அந்த ஐக்கிய முனனணி அரசு என்ன செய்தது? ஐ. மு. அரசிலே மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியே கணிசமான எண்ணிக்கையில் மாபெரும் கட்சியாக இருந்ததால், பல சாதனைகளைச் சாதித்தது.

அவை யாவை?

ஐ. மு. அரசை உழைக்கும் வர்க்கங்களின் போராட்டக் கருவியாகப் பயன்படுததினர்கள்.

அப்படி என்ருல் என்ன?...... சுரண்டலையும் அடக்குமுறையையும் எதிர்த்துப் போராடும் மக்களுககு அனுகூலமாகவும் பாதுகாப்பாகவும் இருக்கும்படி அரசு இயநதிரத்தை வளைக்கவேணடும என தீர்மானிததார்கள.

அப்படி என்ருல் அருத்தம் என்ன என்று கேட்கிறீர்களா? கேளுங்கள்.

தொழிலாளர்கள் சம்பள உயர்வுக்காவும்... சங்க உரிமைகளுககாகவும வேலை நிறுததம செய்தால்...மறியல் செய்தால... முதலாளியைச் சுறறி வளைத்து முற்றுகை போட்டு கெரோ செய்தால்... அந்தத் தொழிலாளாகளை அடித்து நொறுக்க படை பட்டாளங்களை அனுப்புமாறு போன செய்தால...போலீஸபடைகளைஏற்றிச்செலலவேன அனுபபககூடாது... முதலாளியை அடிததாலோ அல்லது அவரது ஆலையின இயந்திரங்களைச் சேதபபடுத்தினுலோ தான அங்கே போலஸ படை போய் தலையிட வேண்டும்" — என்று முடிவு செய்தது.

இந்த முடிவினல் பழைய போக்குக்கு ஒரு முடிவு கட்டப்பட்டது. அதாவது வேலை நிறுத்தம் என்றவுடன் முதலாளி போன் பண்ணுவதும் — என்ன விஷயம என்று கூட கேட்காமல் போலீஸ வேன் அனுப்புவதும் இனி நடக்க முடியாது என்று ஆகிவிட்டது.

இதன் விளைவு என்ன? தொழிலாளர் போராட்டங்கள் அலையலையாக எழுந்தன. தொழிலாளர்களுக்கு அனுதாபமாக அரசு இருபபது தெரிந்தவுடன்... பயந்தாங்கொள்ளிகள், ஆள்காட்டிகள், கருங்காலிகள், ஏட்டிக்கு போட்டி பேசும் சண்டிகள் உட்பட எல்லோருமே... சங்க வித்தியாசமின்றி வேலை நிறுத்கதில் குதித்தார்கள்.

தொழிற்சங்க ஊழியர்களைத் தாக்குவதற்கு முதலாளியின் குண்டர்கள் முற்பட்டால், அக்குண்டர்களின முழங்கால் சிப்பியைக் கழற்றிவிடுவதற்கு ஜோதிபாசுவின் போலீஸ்படை குண்டாந்தடியைச் சுழற்றிக் கொண்டிருந்தது.

அப்புறம் என்ன? அமைச்சர்களும் அரசு இயந்திரமும் சுரணடல் வர்க்கத்தின் சொறபடி ஆடவில்லை என்பதை அறிந்துகொண்ட முதலாளிகள், நீண்டநாள் வரை சணடிததனம செய்து, தொழிலாளர்களைப் பட்டினிப்போட்டுப பணியவைக்க முடியவில்லை. ஏனென்ருல், தொழிலாளாநல மந்திரியும், அதிகாரிகளும் வேறு, "சீக்கிரம் சமரசமாகப் போங்கள்"—என்று முதலாளிகளுக்கு கிட்டி போட்டார்கள்.

அப்புறம் என்ன? பழையகாலம் பறந்துவிட்டதையும், புதுவெள்ளம் புகுந்துவிட்டதையும் முதலாளிகள் உணர்ந்தனர்... கீழேஇறங்கி வந்தனர்...... ஆயிரமாயிரம் போராட்டங்கள் நடந்தன...... சமரசமாகவே முடிந்தன.

விளைவு என்ன? தொழிலாளர்களுக்கு 50 கோடி ரூபாய் ஊதிய உயர்வாகக கிடைத்தது.

அதாவது, முதலாளிகளின் ஜேபியிலிருந்த50கோடி ரூபாய், தொழிலாளர்களின் ஜேபிகளுக்குள் போயிற்று.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கடசியின் மாற்றுக் கொள்கை என்பது இதுதான்!

போராடும் தொழிலாளர்களின் மண்டையை உடைக்க குண்டாந்தடிப் போலீஸை அனுப்புவது காங்கிரஸ் அரசின் கொள்கை.

அதற்கு மாறுபட்ட கொள்கையை — அதாவது வேலைநிறுததப போராட்டங்களை ஆதரிக்கவும், அடிக்க மறுக்கவுமானதொரு மத்றுக்கொள்கையை தி மு க, வலது கம்யூனிஸ்ட்கட்சி உட்பட, இதர எந்தஎதிர்க்கட்சிகளும் இன்றுவரை ஏற்றுக்கொள்ளவில்லை.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி ஒன்றுதான் மாற்றுக்கொள்கையை அமுல்நடத்தியது. போராடும் தொழிலாளர்களில் ஒருவரைக்கூட ஜோதிபாசுவின் போலீஸ படை அடிக்கவில்லை......ஒருவரைக்கூட சுடவில்லை......

அமைதிப் பூக்காடு பற்றியும் — தொழில் அமைதி பற்றியும் பேசுவோரே......இதைப்பற்றி என்ன சொல்லுகிறீர்கள்?

—ஐ. மா. பா.

## புதுக்கோட்டையில் அகதிகள் போராட்டம்

புதுக்கோட்டை, செப்.28— 'அகதிகளாக்கிவிட்ட அரசே எங்களை அநாதையாக்காதே'என்றுஇலங்கையிலிருந்து வெளியேற்றப்பட்டிருக்கும் அகதிகள் போராட்டத்தை தொடங்கியுள்ளார்கள்.

இதற்காக இங்கு அகதிகள் சங்கம் அமைக்கப்பட்டுள்ளது. இலங்கையிலிருந்து வெளியேற்றப்படும்போது இந்திய ஹை கமிஷனர் கொடுத்த வாக்குறுதிகளை நிறைவேற்ருமல் அரசு காலம் கடத்துகிறது.

அகதிகள் மறுவாழ்வு பற்றிகலெக்டர் அலுவலகம் செய்துவரும்கொடுமைகளை ஜனுதிபதிக்கும் மத்திய மாநில அரசுகளுக்கும் தெரியப்படுத்தவும் அகதிகள் சங்கம் முடிவு செய்துள்ளது.

போராட்டத் திட்டத்தை வகுக்க அகதிகள் சங்கக் கூட்டம் புதுக்கோட்டை உசிலங்குளம் 2-ம் வீதியில் பாவா சோப் கம்பெனி அருகிலுள்ள சங்கக் கட்டிடத்தில் அக்டோபர் 11-ம் தேதி மாலை 4 மணிக்கு நடைபெறும் என்று சங்கத் தலைவர் தோழர் எஸ். சுப்பிரமணியம் அறிவிக்கிருர்.

## விவசாயிகள் தலைவர் படுகொலை

சிலிகுரி. செப். 29— விவசாயிகள் சங்கத் தலைவரும், இந்திய கம்யூனிஸ்ட் (மார்க்சிஸ்ட்) கட்சியின் முன்னணித் தோழருமான தோழர் பாசக்சிங்கை அவருடைய வீட்டிலேயே சனிக்கிழமை இரவன்று ஒரு கும்பல் படுகொலை செய்துள்ளது.

கொலை வெறியர்கள், தோழர் பாசக்சிங்கைக் கொன்றுவிட்டு அவருடைய உடமைகளையும் கொள்ளையடித்துச் சென்று விட்டனர்.

## குஜராத் மாநிலமெங்கும் மாணவர், ஆசிரியர் வேலைநிறுத்தங்கள்

குஜராத், செப். 28— குஜராத் மாநிலம் முழுவதும் மாணவர்கள், ஆசிரியர்கள் தங்களது நியாயமான கோரிக்கைகளுக்காக வேலை நிறுத்தம் செய்துவருகிருர்கள்.

### அமதாபாத்தில்

பள்ளி நிர்வாக அதிகாரிகள்எ ஸ்.எஸ்.எல்.சி. தேர்வுக் கட்டணத்தில் திடீரென்று ரூ. 5 உயர்த்தினர்.

இந்த திடீர் தேர்வுக் கட்டண உயர்வைக்கண்டித்து மாணவர்கள் ஒரு நாள் வேலை நிறுத்தம் செய்தனர்.

மாணவர்களின் ஒற்றுமையைக் கண்ட அரசு பணிந்து உடனே உயர்த்தப்பட்ட தேர்வு கட்டண விகிதத்தை ரத்து செய்ய உத்தரவிட்டது.

அனைத்து கல்வி நிறுவனங்களையும் நாட்டுடைமையாக்க வேண்டும் என்று பள்ளி மாணவர்களும், கல்லூரி மாணவர்களும் வேலைநிறுத்தம் செய்தனர்.

தங்களுடைய நீண்டகால கோரிக்கைகளான லஞ்சம், கல்லூரி நிர்வாகத்தின் மீது பல்கலைக் கழகம் அதிகமான கட்டுப் பாடுகளை விதிக்கவேண்டும் என்ற கோரிக்கைகளை அரசாங்கம் அசட்டை செய்து வருகிறது. எனவேதான் மாணவர்கள் இந்த வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டுள்ளனர்.

பல ஆர்ப்பாட்டங்கள், ஊர்வலங்களை மாணவர்கள் நடத்தினர். அண்மையில் காந்தி நகருக்கு எதிரிலுள்ள சட்ட மன்றத்திற்கு முன் ஆர்ப்பாட்டம் நடத்தினர்.

பின்னரே குஜராத் மாநில அரசு லேசாக அசைந்து கொடுத்தது.

மாணவர்கள், ஆசிரியர்களின் நியாயமான கோரிக்கைகளை கடுமையாக ஏற்க மறுத்த அரசு — மாணவர்களின் கோரிக்கைகள் சிலவற்றை ஏற்று உயர்நிலைக் கல்விக் குழு என்ற ஒரு அமைப்பை உருவாக்க முடிவு செய்துள்ளது!

### பரோடாவில்

பரோடாவிலுள்ள எம். எஸ். பல்கலைக் கழகத்தில் மொழிப் பிரச்சனைக்காக மாணவர்கள் கிளர்ந்தெழுந்துள்ளனர். ஆங்கிலமே நீடிக்கவேண்டும் என்று மாணவர்கள் கோருகின்றனர்.

தங்களது கோரிக்கைகளை வலியுறுத்தி அமைதியாக வேலை நிறுத்தம் செய்த மாணவர்களின்மீது போலீஸ் தடியடிப் பிரயோகம் செய்தது. கல்லூரி காம்பவுண்டிற்குள் புகுந்து மாணவர்களை போலீசார் மிருகத்தனமாகத் தாக்கியுள்ளனர்.

இதையொட்டி எட்டு மாணவர் சங்கங்களைச் சேர்ந்த 82 மாணவர் தலைவர்கள் உட்பட 170 மாணவர்களை போலீஸ் பாதுகாப்புச் சட்டப்படி கைது செய்து சிறையில் அடைத்துள்ளது.

### சூரத்தில்

குரஜாத்தின் தென்பகுதியிலுள்ள சூரத் பல்கலைக் கழக மாணவர்கள் ஒன்றுபட்டு நடத்திய வேலை நிறுத்தப்போராட்டம்வெற்றிபெற்றது.

சூரத் பல்கலைக் கழகத்தில் பயிலும் 24 ஆயிரம் மாணவர்கள் இந்த வேலை நிறுத்தத்தில் கலந்துகொண்டனர்.

கல்லூரி தேர்வு கட்டண விகிதத்தை குறைக்க வலியுறுத்தியே மாணவர்கள் இந்த வேலை நிறுத்தப் போராட்டத்தில் கலந்து கொண்டனர்.

பல நாட்கள் தொடர்ந்து மாணவர்கள்வேலைநிறுத்தம் செய்த பின் பல்கலைக் கழக சிண்டிகேட்டும், அகாடமிக் கவுன்சிலும் மாணவர்களின் கோரிக்கையை மறு பரிசீலனை செய்ய உத்தேசித்துள்ளன.

## அவனியாபுரத்தை மதுரை மாநகராட்சிக்குள் சேர்த்திடுக

### மதுரை மாநகராட்சி கூட்டத்தில் மார்க்சிஸ்ட் உறுப்பினர் கோரிக்கை

மதுரை. செப். 29 — மதுரை மாநகராட்சி எல்லையை விரிவுபடுத்தும் திட்டத்தில், மிகவும் முக்கிய பகுதியான அவனியாபுரம் சேர்க்கப்பட வேண்டுமென்று தோழர் வெ. வீரபத்திரன் மாநகராட்சிக்கூட்டத்தில் வலியுறுத்திப் பேசினுர்.

மதுரை மாநகராட்சிக் கூட்டம் செப். 25-ல் நடைபெற்றது. அக்கூட்டத்தில் மதுரை மாநகராட்சி எல்லையை விரிவு படுத்தும் தீர்மானம் ஒன்று விவாதத்துக்கு வந்தது. அதில் ஏற்கனவே தீர்மானித்த 23 கிராமங்கள் என்பதற்கு பதிலாக அவைகளில் 13 கிராமங்களை மட்டுமே நகர எல்லையுடன் இணைக்க வேண்டுமென்று குறிப்பு வந்தது.

இது பற்றி தோழர் வீரபத்திரன் பேசியதாவது,— மதுரையின்வரலாற்றுப்படி மதுரை மீனுட்சி அம்மன் கோவிலை மையமாகக் கொண்டு சுற்றிலும் கோரிப்பாளையம், குயவர்பாளையும், ஆரப்பாளையம், பிள்ளையார்பாளையம் முதலிய பாளையங்களைக் கொண்டதாக அமைத்து, அன்றைய நகரமைப்பு இருந்து வந்திருக்கிறது. அவற்றில் இரண்டு இன்று நகரின் மையமாக வந்துவிட்டது.

இப்போதைய திட்டத்தில் ஆரப்பாளையம் சேர்க்கப்பட்டிருக்கிறது. ஆனுல் பிள்ளையார்பாளையம் எனும் அவனியாபுரம் மட்டும் புறக்கணிக்கப்பட்டிருக்கிறது.

இப்பகுதியானது மதுரை விமான நிலையம் செல்லுப் சாலையில் உள்ளது. விமானத்திலிருந்து வநததும் முதலில் காணப்படும் பகுதி நகர்பகுதியாக இல்லாமல்—கிராமப் பகுதியாக— அபிவிருத்தியற்ற பகுதியாக இருப்பது-மதுரை மாநகரின் பெருமைக்கு எடுத்துக்காட்டாக இருக்க முடியாது.

இப்பகுதியில்தான் மாநகராட்சிக்கு வருவாய் வரத்தக்க புல் பண்ணையும்,மாநகராட்சி ஊழியர் குடியிருப்பும் உள்ளன. இவைகளை விருத்தி செய்யவும், தென் பகுதியும் நல்ல முறையில் விருத்தியடையச் செய்ய வேண்டியதும் அவசியம்.

ஹவுசிங் போர்டு சேர்மன் ஞானஒளிவு காலத்தில் நகராட்சி தீர்மானித்த திட்டப்படி வீடுகள் கட்டவும் ஹவுகிங் போர்டு மூலம் நடவடிக்கை எடுக்கவும் மேயர் அவர்கள் தமது செல்வாக்கை உபயோகிக்கவும் கேட்டுக்கொண்டு நமது பிரேரணையை வலியுறுத்திப் பேசினுர்.

## கல்லூரியில் சேரப்போன மாணவர் சங்கத் தலைவர் குத்தி கொலை

அகர்தலா, செப். 28— இந்திய மாணவர் சங்கத்தின் திரிபுரா மாநிலத் தலைவர்களில்ஒருவரான தோழர் கிர் கோபால் டே கடந்த 26-ந் தேதி குண்டர்களால் படுகொலை செய்யப்பட்டார்.

அகர்தலாவில் உள்ள வீரவிக்ரமா கல்லூரியினுள், கல்லூரி முதல்வர் அறைக்கு முன்னுலேயே குண்டர்கள் அவரை கத்தியால் குத்திப் படுகொலை புரிந்துள்ளனர்.

அரசியல் விஷமிகளின் கொலைவெறிக்குப் பலியான தோழர் கிர் கோபால் டே பி. ஏ. பட்டப் படிப்பில் சேருவதற்காக அக்கல்லூரி முதல்வரைச் சந்திக்க வந்திருந்தபோதே இந்தக் கொலை நடந்துள்ளது.

## தலைமை செயலகத்தின் முன் பெண்கள் ஆர்ப்பாட்டம்

கல்கத்தா, செப் 29— இங்குள்ள அரசாங்க தலைமைச் செயலகத்தின் முன்பு விலைவாசியைக் கட்டுப்படுத்தக் கோரி இடதுசாரி கட்சிகளைச் சேர்ந்த ஐந்து மாதர் ஸ்தாபனங்களைச் சார்ந்த பெண்கள் கடந்த செவ்வாயன்று மாபெரும் ஆர்ப்பாட்டம் நடத்தினுர்கள்.

முதலமைச்சர்சித்தார்த்த சங்கர்ரேயிடம் மகஜர் ஒன்றைக் கொடுத்தனர்.

### விலையை கட்டுப்படுத்துக

ஆர்ப்பாட்டத்திற்கு முன்பு சல்கத்தாவின் முக்கிய வீதிகள் வழியாக உணர்ச்சி மிக்க கோஷங்களை எழுப்பிக் கொண்டு ஊர்வலமாக வந்தனர்.

சர்க்கரை, பருப்பு, கடுகு, எண்ணெய், குழந்தை உணவு, மண்ணெண்ணெய் ஆகியவற்றை அரசாங்கமே வாங்கி விற்பனை செய்ய வேண்டுமெனவும், நகரங்களிலும் கிராமங்களிலும் நியாயவிலைக் கடைகள் திறக்க வேண்டுமெனவும், பங்கீட்டுக் கடைகளில் தரக்குறைவான தானியங்கள் விற்கப்படுவதை தவிர்க்க வேண்டுமெனவும் அவர்கள் கோரினர்.

## எதிர்க் கட்சி....

(1ம் பக்கத் தொடர்ச்சி)

எனனுடைய பேச்சின் உள்ளடக்கம் ஆபத்தாக இருந்தது என்று முதலமைச்சர் கூறியிருப்பது உண்மைக்கு மாருனது.

முதலமைச்சர் குறிப்பிடும் கார்விபத்தில் எத்தனை பேருக்குக் காயம் ஏற்பட்டது என்று அவரால் கூற முடியுமா?

### அறிவிப்பில் முரண்பாடு

அந்தப் பகுதியிலுள்ள காங்கிரஸ் தலைவர்கள் ஒருவருக்கொருவர் முரணுகப் பேசுகிருர்கள்.

கூட்டம் நடக்கும் இடத்துக்கு நாங்கள் செல்லும் போதுதான் கார் விபத்து ஏற்பட்டது என்றும் அதில் ஒருவருக்குக் காயம் ஏற்பட்டது என்றும் அந்தத் தொகுதி காங்கிரஸ் எம். எல். ஏ. கூறுகிருர்.

கூட்டம் முடிந்து திரும்பிப்போகும் வழியில் கார் விபத்து ஏற்பட்டது. என்றும் அதில் மூன்று, நான்கு பேருக்குக் காயம ஏற்பட்டது என்றும் 24-பர்காஞ மாவட்டத் தென்பகுதி இளைஞர் காங்கிரஸ் துணைத் தலைவர் கூறுகிருர்.

எனது பேச்சின் உள்ளடக்கத்தில் ஆட்சேபகரமான பகுதி இருந்தது என்று முதலமைச்சர் நிரூபிக்கத் தயாரா?

இவ்வாறுதமது அறிக்கையில் தோழர் ஜோதிபாசு கூறியுள்ளார்

## நெல்லை மாவட்ட வேலையில்லா ஆசிரியர்கள் உண்ணுவிரதம்

திருநெல்வேலி, செப். 28— நெல்லை மாவட்ட வேலையில்லாத ஆசிரியர்கள் மாவட்டக் கலெக்டர் அலுவலகம் முன்பு உண்ணுவிரதம் இருந்தனர்.

25-ந் தேதி நடந்த இந்த அடையாளஉண்ணுவிரதத்திற்குமாவட்டவேலையில்லா ஆசிரியர் சங்கத்தலைவர் கு. ராமசாமி தலைமைவகித்தார்.

செயலாளர் பா. லுக்காசு இரா. குற்ருலம, எம். தங்கையா, உதவிச் செயலாளர் சி. கணேசன் மற்றும் செயற் குழு உறுப்பினர்கள் 13 பேரும் இந்த உண்ணுவிரதத்தில் கலந்து கொண்டனர்.

உண்ணுவிரதம் இருப்போர் புகைவண்டி நிலையத்திலிருந்து ஊர்வலமாக அழைத்துச் செல்லப்பட்டனர். ஊர்வலத்தில் வேலை வேண்டும், அல்லது உதவித்தொகை வேண்டும்! அனைத்துப் பள்ளிகளையும் அரசுடைமையாக்கு! ஆசிரியர் மாணவர் விகிதத்தைக் குறை! ஆசிரியர் நியமனத்தில் லஞ்சம்—சிபாரிசு ஒழிக! போன்ற கோரிக்கைகளை எழுப்பிக் கொண்டும்கோரிக்கைஅட்டைகளை ஏந்திக்கொண்டும் வந்து கலெக்டர்அலுவலகம் முன் உண்ணுவிரதம் இருந்தனர்.

சு. பாலவிநாயகம் (மார்க்சிஸ்ட்), எஸ். அழகர்சாமி எம். எல். ஏ. (வலது கம்யூ) கிருஷ்ணன் (ஜனசங்கம்), சண்முகம் (சிண்டிகேட்) நெல்லை கிட்டு ஆகியோர் உண்ணு விரதத்தினரைச் சந்தித்து ஆதரவு தெரிவித்தனர்.

பின்னர் கலெக்டர் அலுவலகத்தில் கோரிக்கை மகஜர் அளிக்கப்பட்டது. மாலை 5 மணிக்கு உண்ணுவிரதத்தை செல்லச்சாமி எம். பி. முடித்து வைத்தார்.

## பொள்ளாச்சி ஆசிரியர் கூட்டணி பேரவை

பொள்ளாச்சி, செப். 28— தமிழ்நாடு தொடக்கப் பள்ளி ஆசிரியர் கூட்டணியின் பொள்ளாச்சி கோட்டச் சிறப்புப் பேரவையும சிறை மீண்ட ஆசிரியர்கட்குப் பாராட்டு விழாவும் இங்கு திரு கசோமசுந்தரம் தலைமையில் அக்.1ல் நடைபெறும்.

ஆசிரியர் கூட்டணியின் பொதுச் செயலாளர் செ. முத்துச்சாமி, மாநிலப் போராட்டக் குழுத் தலைவர் அ சாமிநாதன் மற்றும் மாவட்டப் பொறுப்பாளர்கள், ஒன்றியப்பெருந்தலைவர்கள், தோழமை இயக்க, தொழிற்சங்கத் தலைவர்கள் கலந்து கொள்வர்.

## சணல் ஆலைத் தொழிலாளர்கள் பொது வேலைநிறுத்த ஆயத்தம்

கல்கத்தா, செப். 29— மேற்குவங்கசணல்ஆலைத் தொழிலாளர்களின் பொது வேலைநிறுத்தத்திற்கு சி ஐ டி யூ அறைகூவல் விடுத்துள்ளது.

சணல் ஆலைத் தொழிலாளர்களின் ஒன்றுபட்ட வேலைநிறுத்தத்திற்காக இயக்கம் நடத்தும்படி அனைத்து மத்திய சங்கங்களுக்கும் சி ஐ டி யூ சங்கம் வேண்டுகோள் விடுத்துள்ளது.

சணல் ஆலைத் தொழிலாளர்களுக்கு 20 சதமான போனஸ் வழங்க வேண்டும் என்று சி. ஐ. டி. யூ. கோருகிறது.அண்மையில் நடந்து முடிந்த பங்களாதேஷ் யுத்தத்தால் ஏற்பட்ட நெருக்கடியை பயன்படுத்தி சணல் ஆலை முதலாளிகள் கொள்ளை லாபம் அடித்துள்ளார்கள்-

எனவே 1970ம் ஆண்டு ஒப்பந்தப்படி 7 சதமான போனஸ் கொடுத்தால்ஏற்க முடியாது என்று சி ஐ டி யூ சங்கம் மறுத்துவிட்டது-

ஆனுல் போனஸ் வழங்க மட்டும் 1970ம் ஆண்டு ஒப்பந்தத்தை சுட்டிக் காட்டும் முதலாளிகள் ஒப்பந்தத்தை மீறி 65 ஆயிரம் பதிலி தொழிலாளர்களை ஆட்குறைப்பு செய்துள்ளனர். ஆட்குறைப்பு செய்யப்பட்ட இந்த 65 ஆயிரம் தொழிலாளர்களும் மீண்டும் வேலைக்குஎடுத்துக்கொள்ளபடவேண்டும். 20 சதமான போனஸ் வேண்டும். போன்ற பல முக்கியமான கோரிக்கைகளை வலியுறுத்தி சணல் ஆலைத் தொழிலாளர்கள் சி. ஐ. டி. யூ. சங்கத்தின் கீழ் அணிதிரண்டு வருகின்றனர்.

## கோர்ட் உத்தரவை மீறி தொழிற் சங்கத் தலைவர்களுக்கு தடை

கல்கத்கா, செப். 27— கல்யாணி நூற்பு ஆலையில் (அரசால் நடததப்படுவது) அங்கீகரிக்கப்பட்ட சங்கத்தின் நிர்வாகிகளையும், உறுப்பினர்களையும் எவ்வித துன்புறுத்தலும்இன்றி தங்களது வேலையைச் செய்ய அனுமதிக்கக் கோரி மேற்கு வங்க சிஐ டி யூ பொதுச் செயலாளர் தோழர் மனேரஞ்சன் ராய் எம். பி யும்,சாமர்முகர்ஜி எம். பி. யும் அறிக்கை ஒன்று விடுத்துள்ளனர்.

இவர்கள் தங்களுடைய வேலைகளைச் செய்யவும், பாதுகாப்புடன் நடமாடவும் நிர்வாகம் அனுமதிக்க வேண்டுமென்று கல்கத்தா உயர்நீதிமன்றம் ஜூலை21ல் உத்தரவிட்டிருந்தது.

புதிதாக ஏற்படுத்தப்பட்ட தொழிற் சங்கத்தைச் சேர்ந்தவர்கள், இவர்களை ஆலைக்குள் நுழையமுடியாதபடியும், வேலை செய்ய முடியாதபடியும் தடுத்து வருகின்றனர்.

இந்நிலையில் இந்த சங்கம் இணைந்துள்ள ஐ என் டி யூ சி தலைவர்களுக்கும்தொழில் அமைச்சருக்கும் கடிதம் எழுதியும் அவர்கள் தங்களால் ஒன்றும் செய்ய முடியாது என அறிவித்துள்ளனர்.

## "தீக்கதிர்" சந்தாதார்கள் கவனத்துக்கு!

தோழர்களே!

கட்சியின் தமிழ் மாநிலக் குழு முடிவின்படி வருகிற அகடோபர் 1-ந் தேதி முதல் தீக்கதிரின் விலை 15 காசாக உயர்வதால், சந்தா செலுத்தி பத்திரிகை பெறும் தோழர்கள் கீழக்காணும் விகிதப்படி சந்தாத் தொகையை அனுப்பிவைக்க வேண்டுகிரேம்.

| | | | |
|---|---|---|---|
| 1 | மாதச் சந்தா | ... | ரூ. 4—00 |
| 3 | ,, | ... | ரூ. 11—00 |
| 6 | ,, | ... | ரூ. 22—00 |
| 1 | ஆண்டு சந்தா | ... | ரூ. 44—00 |

நிர்வாகி,
தீக்கதிர்.

இந்திய கம்யூனிஸ்ட்கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ்மாநிலக் குழு சார்பில், தீக்கதிர் அச்சகத்தில் (13- முதல் சந்து வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா